# உங்கள் குழந்தை நலமாய் வாழ...

**நல்ல கண்பார்வை**

விடமின் ஏ நல்ல கண்பார்வை தருகிறது. 1 டீஸ்பூன் ஸிரப் மினடெக்ஸில் போதுமான அளவு விடமின் ஏ உள்ளது.

**ஆரோக்கியமான இரத்தம்**

இரும்புச் சத்து ஆரோக்கியமான இரத்தத்தைத் தருகிறது. 1 டீஸ்பூன் ஸிரப் மினடெக்ஸில் போதுமான அளவு இரும்புச் சத்து உள்ளது.

**உறுதியான எலும்புகள்**

விடமின் டி எலும்புகள் உறுதியடைய அவசியம். 1 டீஸ்பூன் ஸிரப் மினடெக்ஸில் போதுமான அளவு விடமின் டி உள்ளது.




உங்கள் குழந்தைக்கு தருவீர்

ஸிரப்

## மினடெக்ஸ்®

**மூப்பயன் அளிக்கும் டானிக்— க்ளாக்ஸோ தயாரிப்பு!**

நினைவிருக்கட்டும், நாள்தோறும் 1 டீஸ்பூன ஆரஞ்சு சுவையுள்ள ஸிரப் மினடெக்ஸ் உங்கள் குழந்தைக்குத் தந்தால், மூன்று விதங்களில் ஆரோக்கியப் பாதுகாப்பு கிடைக்கும்.

170 மி.லி....ரு. 3.63 } வரிகள் தனி!
340 மி.லி....ரு. 6.27 }

எல்லா கடைகளிலும் கிடைக்கும்.

க்ளாக்ஸோ

CHGM-I-172 TAM

# கல்கி

சிறுகதைச் சிறப்பிதழ்




பொருளடக்கம்


சாதாரண, கார்த்திகை 14 — 1970 நவம்பர் 29




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10 00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


இந்தி-சீனி
பாய் பாய்!


எஜமானரே! இதைப்பற்றி என்ன சொல்கிறீர்கள்?


கடன் கொடுப்பதில் கட்டுப்பாடு
பணவீக்கம்
இந்தக் கூட்டில் என்னை அடைத்து வைக்கலாம் என்று நினைப்பது எவ்வளவு அசட்டுத்தனம்!



மலர் 30



இதழ் 18

# ஜனநாயகமே வேண்டும்; சோஷலிஸம் அல்ல

'சோஷலிஸம்', என்ற வெற்று வார்த்தையை விடாமல் பிரசாரம் செய்து வருவதால் மக்களின் சிந்தனை எப்படிக் குழப்பம் அடைந்திருக்கிறது என்று சமீபத்தில் ராஜாஜி எடுத்துக் காட்டியிருந்தார் அல்லவா! 'மக்கள் நலன்' என்ற இலட்சியத்தை அடைவதற்காகச் சென்ற நூற்றாண்டில் வகுக்கப்பட்ட பல மார்க்கங்களில் ஒன்றே சோஷலிஸம் என்றும், அது இப்போது செல்லுபடியாகாது என்றும், எனினும் பிரசாரம் காரணமாக நம் மக்கள் சோஷலிஸம் என்பதே மக்கள் நலன் என்று எண்ண ஆரம்பித்து விட்டனர் என்றும் ராஜாஜி விளக்கி யிருந்தார்.

இக்கருத்துக்கு முற்றிலும் ஆதரவாக, அநுபவமும் அறிவுச் சிறப்பும் வாய்ந்த ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் தமது கருத்துக்களை 'ஸ்வராஜ்யா'வில் வெளியிட்டிருக்கிறார்.

'ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் ரண சிகிச்சை செய்துகொண்டதை அடுத்து, மிகுந்த தேக உபாதி அடைந்த நிலையிலேயே இக்கட்டுரையை எழுதியிருப்பது 'ஸ்வராஜ்யா'வுக்கு அவர் செய்துள்ள பெரிய கௌரவமாகும்' என்று ராஜாஜி கூறி யிருக்கிறார். பிரசார கோஷத்தாலும், பொய் வாக்குறுதிகளாலும் ஏமாற்றப்படும் மக்களுக்கு ஓர் அடிப்படை விஷயத்தில் ஞானம் உண்டாக்க வேண்டியதன் அவசியத் தேவையை அவர் விண்டு கூறி விளக்கி யிருக்கிறார். அந்த அடிப்படைதான் "ஜனநாயகம்" என்பது. மாய சோஷலிஸத்தைப் பற்றி எவ்வளவு பிரசாரம் நடக்கிறதோ, அந்த அளவுக்கு சத்திய தத்துவமான ஜனநாயகத்தைப் பற்றி மக்களுக்கு எடுத்துரைத்து அவர்கள் சோஷலிஸத்தைக் கைவிட்டு ஜனநாயகத்தைப் பற்றிக் கொள்ளுமாறு செய்ய வேண்டும் என்பதே ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்களின் மையமான கருத்து.

சுருக்கமாகச் சொன்னால் சோஷலிஸம் என்பது சர்க்காரே சகல துறைகளிலும் கட்டுப்படுத்தும் ஆதிக்கம் பெற்றிருப்பதுதான்: ஜனநாயகம் என்பது தனி மனிதர்கள் சுதந்திரம் பெற்றிருக்கும் நிலையைக் குறிப்பது. ருஷியாவின் அரசியல் சாஸனம் அந்த நாட்டை 'சோஷலிஸக் குடியரசு' என வருணிக்கிறது. நம் சாஸன கர்த்தர்களோ பாரதத்தை 'ஜனநாயகக் குடியரசு' என்றே குறிப்பிட்டனர். அஸ்திவாரத்திலேயே உள்ள இந்த வேறுபாடு நுட்பமான கவனத்துக்கு உரியது. ஆயினும் நம் ஜனநாயகம் தோன்றி இருபதாண்டுகளுக்குள்ளேயே 'ஜனநாயகக் குடியரசு' என்ற தத்துவம் மங்கி, 'சோஷலிஸ பாணி சமுதாயம்' என்ற சொற்றொடரே மேலோங்கும்படி செய்து விட்டனர், நமது ஆட்சியாளர்கள். அதோடு நில்லாமல் தங்களது சித்தாந்தத்துக்கு 'ஜனநாயக சோஷலிஸம்' என்று பெயர் சூட்டி அதைப் பிரமாதமாகப் பிரசாரம் செய்து வருகிறார்கள். வார்த்தைகளை வேண்டுமானால் இணைத்து விடலாம்; ஆனால் தனி மனிதப் பண்புகளையே கருவாகக் கொண்ட ஜனநாயகத்தையும், சர்க்கார் சர்வாதிபத்தியத்தையே மையமாகக் கொண்ட சோஷலிஸத்தையும் எப்படி இணைக்க முடியும்? 'ஜனநாயகம்' என்ற பதத்தை விடாமல் பிடித்துக் கொண்டிருந்தாலும், இவர்களது நாட்டம் 'சோஷலிஸ'த்தில்தான் என்பதும், சமீபகாலமாக அந்தப் போக்கு அசல் 'கம்யூனிஸ'த்தின் திசைக்கே திரும்பி விட்டது என்பதும் நிதரிசனம். எனவே இனியும் மக்கள் மாயச் சொற்றொடர்களில் பிரமை பிடித்திராவண்ணம் அடிப்படை உண்மையில் தெளிவு பெறுவதற்குத் தீவிரப் பிரசாரம் செய்தே யாக வேண்டும்.

தொன்றுதொட்டு நம் நாடு தனி மனிதப் பண்புகளையே ஆதாரமாகக் கொண்டு வளர்ந்து வந்திருக்கிறது. தேசப்பற்றுக்குக் குந்தகமின்றியே இந்தத் தனி மனித சுதந்திர உணர்வை வளர்ப்பதுதான் நம் நாட்டின் இயற்கையான அபிவிருத்திக்கு உதவும் — சோஷலிஸத்தைத் தேடிப் போவதல்ல.

மக்களிடையே உள்ள ஜீவனுள்ள வித்தியாசங்களை மதிக்காமல் எல்லாவற்றையும் ஒட்டுமொத்தமாக ஒரு கபந்த

மாக்கி, ஜீவனற்ற அரசாங்க யந்திரத்தைக் கொண்டு நிருவகிப்பதுதான் சோஷலிஸம். இதில் தனித் தனி தகுதியும், திறமையும், மனப் போக்கும், செல்வ வசதியும், செயலாற்றலும் படைத்தவர்கள் விசேஷத் தூண்டுதல் பெற இடமேயில்லாமல் போகிறது. எந்தப் பணிக்கும் மூலாதாரமான சுய ஆர்வம் என்பது அற்றுப் போகிறது. எனவே, தேசசுபிட்சமே சாத்தியமில்லாமல் போகிறது. ஜனநாயகம் என்பதோ மக்களின் மாறுபட்ட மனோபாவங்களையும், அபிலாஷைகளையும், ஆற்றல்களையும், இலட்சியங்களையும் மதித்து ஏற்கிறது. மொத்தத்தில் தேசத்தின் நலனுக்குக் குந்தகம் இல்லாத முறையில், இவ்வித மாறுபாடுகளைக் கொண்ட வர்க்கங்களும் வகுப்புக்களும் சமுதாயங்களும் தத்தம் துறையில் சுதந்திரமாகச் செயலாற்ற இடமளிப்பது ஜனநாயகம். இந்த முறையில் சுயமான ஈடுபாட்டுக்கு நிறைய இடமிருப்பதால் தேசத்தின் வளர்ச்சி இயல்பாகக் கைகூடுகிறது. எவரையும் கீழ் மட்டத்தில் கொண்டு வந்து தள்ளாமலே, அனைவரையும் உயர்த்தப் பாடுபடுவது ஜனநாயகம். எல்லாரையும் அடிமை நிலை என்ற கீழ் மட்டத்துக்குத் தள்ளிவிட்டு, ஆட்சி அதிகாரம் பெற்றோர் மட்டுமே உச்ச நிலையில் இருப்பது சோஷலிஸம். இதனை மக்களுக்கு ஆணித்தரமாக விளக்கித் தெளிவிக்க வேண்டும்.

தற்போது ஜனநாயகத்தின் லட்சணமாக நம் மக்களிடையே இருக்கும் ஒரே அடையாளம் அவர்களது வாக்குரிமை. ஜனநாயகத்துக்கே விரோதமான சோஷலிஸத்தை ஆதரித்து அவர்கள் இந்த ஜனநாயக உரிமையைப் பிரயோகிக்கலாமா? எனவே, இப்போதிருந்தே 'ஜனநாயகம்' என்பது பற்றி மக்களுக்கு நல்ல பயிற்சி அளிக்க வேண்டும். கல்வி நிலையங்கள், ரேடியோ, சினிமா, பத்திரிகை, பொதுமேடை அனைத்திலும் ஜனநாயக தத்துவம் நன்கு விளக்கப்பட வேண்டும். 'சோஷலிஸம்' முற்றிலும் சர்க்கார் விவகாரமாயிருக்க, 'ஜனநாயகம்' என்பதோ ஆட்சி அமைப்பை மட்டும் குறிக்காமல், மக்களின் வாழ்வோடு வாழ்வாக ஒவ்வோர் அம்சத்திலும் இணைந்த தத்துவமாகும். எனவே, உண்மையில் இதற்குத்தான் பிரசாரம் அவசியம். இதை உற்சாகத்துடன் மேற்கொண்டு '' நாம் ஜனநாயகத்தையே ஆதரிப்பவர் ; எந்த 'இஸ'த்தையும் அல்ல'' என்ற நிலையை நாட்டில் எல்லாப் பிரிவினரும் ஏற்குமாறு செய்ய வேண்டும். இல்லாவிடில் வெற்று வார்த்தையில் நம் மக்களை மயக்கி, அந்நியரின் கொள்கையிலும், இறுதியில் அந்நியரின் ஆதிக்கத்திலுமே நாட்டைச் சிக்க வைக்கும் அபாயம் ஏற்பட்டு விடும்! ''ஜனநாயக உணர்வை மக்களுக்கு ஊட்டி வளர்க்கும் பணியில் இப்போதே காலம் தாழ்த்திவிட்டோம் ; இனியும் காலம் கடத்தினால் விபரீதமே விளையும். மனச்சாட்சியற்ற சாதுரியசாலிகள் இந்நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு, பரிகாரம் காண முடியாத கட்டத்தில் நாட்டை ஆழ்த்திவிடுவார்கள்'' என்று எச்சரிக்கை செய்கிறார் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா.

அந்த எச்சரிக்கை, உறக்கத்திலுள்ளோரை எல்லாம் தட்டி எழுப்புமாக!



# ஒளி மறைந்தது!

உலகத்திலேயே மிக அபூர்வமாக எப்போதேனும் ஒரு முறைதான் உதிக்கக் கூடிய ஒரு பேரறிவு, விஞ்ஞான உலகில் பல்லாண்டு சூரியனாகப் பிரகாசித்து, திடீரென அஸ்தமித்துவிட்டது.

இந்த நூற்றாண்டில் பாரதத்துக்கு விஞ்ஞான உலகில் சிறப்பிடம் பெற்றுத் தந்த மாமேதைகளின் வரிசையில் முதல்வராகத் திகழ்ந்த ஸி. வி. ராமன் அவர்களின் பேரறிவு அகண்ட பரிபூரணப் பேரறிவில் லயித்து விட்டது.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் விஞ்ஞானம் என்று சொன்னால், உடனே ஸி.வி. ராமன் என்ற பெயர்தான் நினைவு வரும். அவர் கண்டுபிடித்த 'ராமன் எபெக்ட்' இன்னதென்று நம்மில் பெரும்பாலோருக்குத் தெரியாது. ஒளிச் சிதறலையும் வண்ண விசித்திரங்களையும் குறித்த ஏதோ ஓர் அரிய அடிப்படைத் தத்துவத்தை அவர் கண்டுபிடித்துச் சொன்னார் என்றே நாம் அறிவோம். தினசரி வாழ்வில் அதன் பிரயோசனம் என்ன என்பது நமக்குத் தெரியாது. ஆயினும் நுட்பமான மேல் மட்ட பௌதிக விஞ்ஞானத்தில் அவரது கண்டுபிடிப்பு மகத்தான எதிர் விளைவை உண்டாக்கியதாக அறிவதே நமக்குப் பெருமிதமும் பெருவகையும் ஊட்டி வந்தது.

ஒலி உலகில் மட்டுமின்றி ஒளி உலகிலும் அவர் அதிமர்மமான இரகசியங்களுடைய இதயத்தினுள்ளேயே ஊடுருவிச் சென்று, விஞ்ஞானமும் அதன் மூலம் மனித சமுதாயமும் வாழ அற்புதமான கண்டுபிடிப்புக்களைச் செய்தார் என்பதே நமக்குப் போதும். இறைவன் படைத்த மகா மதிகளில் ஒன்று அவர் என்பதே நமக்குப் போதும். அவருக்கு விஞ்ஞானமே தெய்வமாக, வேதாந்தமாக, வழியாக இருந்தபோதிலும் நம்மைப் பொறுத்த மட்டில் அவரைப் பராசக்தியின் இரு வடிவங்களான ஒலிப் பிரபஞ்சம், ஒளிப் பிரபஞ்சம் இரண்டின் மர்ம சூத்திரங்களையும் கண்ட ரிஷியாகவே வைத்துக் கொள்ளலாம்.

மிகச் சாதாரண குடும்பத்தில் பிறந்து, சாமானியச் சூழ்நிலையில் வளர்ந்து, தமது அறிவுப் பிரகாசத்தால் அசாதாரண, அசாமானிய நிலைக்கு உயர்ந்து நோபல் பரிசு பெற்ற ஒரே தமிழராக அவர் பரிணமித்ததிலிருந்து, நாம் தளரா உழைப்பு, விடாமுயற்சி இவை குறித்துப் படிப்பினை பெறலாம்.

ஜடப் பொருட்களுடன் - சோதனைக் குழல்களுடன் காலம் கழிக்கும் விஞ்ஞானிகள் எப்பேர்ப்பட்ட அழகுணர்ச்சியுடன் விளங்க முடியும் என்று நிதரிசனமாகக் காட்டியவர் அவர். மலர்களிடமும், நல்ல சங்கீதத்திலும் அவருக்கு இருந்த ஈடுபாட்டை 'பிரேமை' என்றே சொல்லலாம். வண்ண ஆராய்ச்சிக்கான பொருட்களாக மட்டும் அவர் மலர்களைக் கருதவில்லை; சப்த ஆராய்ச்சிக்கான பொருட்களாக மட்டும் அவர் ஸ்வரங்களைக் கருதவில்லை. அவற்றின் சௌந்தரியத்தில் இதயத்தைப் பறி கொடுக்கவும் அறிந்திருந்தார்.

மாமேதையாயினும் குழந்தை போல் பழகினார். ஒளிவு மறைவு இன்றிப் பேசினார். நுட்பமான கண்டுபிடிப்புக்களையும் கதை சொல்லுவதுபோல் சுவாரசியமாக விளக்கினார்.

ஸி. வி. ராமன் அவர்களின் பெருமை அவர் விஞ்ஞான உலகில் இந்தியாவுக்கு ஒரு கீர்த்தி வாசலைத் திறந்து வைத்ததோடு மட்டுமின்றி, நமக்குப் பிறகும் அந்த உலகை அணி செய்யக் கூடிய பல பேரறிஞர்களைச் சீடர்களாகப் பயிற்றுவித்திருப்பதுதான். 'இந்தியாவுக்கு ஏதோ எட்டாக்கைத் தத்துவம்தான் தெரியும்; விஞ்ஞானம் அதற்கு வராது' என்று நாம் கேலிக்கு ஆளான நாட்களில் நம் தேசத்தில் உலகம் போற்றும் விஞ்ஞானியாகத் தோன்றியவர் மறைந்து விட்டார்.

பல நாடுகளின் தலைசிறந்த விஞ்ஞான விருதுகளைப் பெற்றதோடு, பாரதத்தில் அரசாங்க விருதுகள் ஏற்படுத்தப்பட்ட முதல் வருடமே பாரத ரத்தினமானார் அவர். அவரை 'ரத்தினம்' என்பது பலவிதங்களிலும் பொருந்தும். வண்ணத்தில் ஆராய்ச்சி புரிந்தவர்; பளிங்கில் ஆராய்ச்சி புரிந்தவர் — அவர் வண்ணப் பளிங்கான ரத்தினமேதான். இந்திய அன்னையின் மணிமகுடத்தில் திகழ்ந்த ரத்தினங்களில் ஒன்றின் ஒளியை இழந்துவிட்டோம். ஒளி உலகில் உண்மைகளை வெளியிட்ட பேரொளியை இழந்துவிட்டோம்!

# என்ன சேதி?

## முக்கியத்துவம் வாய்ந்த மகாநாடு

டிசம்பர் 12, 13 தேதிகளில் சேலத்தில் ஒரு முக்கியத்துவம் வாய்ந்த மகாநாடு நடைபெறுகிறது. ராஜாஜியை உலகுக்குத் தந்தது சேலம் மாவட்டம். அம்மாவட்டத் தலைநகரில் டிசம்பர் 12, 13 தேதிகளில் தமிழக சுதந்திரக் கட்சி மகாநாடு நடைபெறுகிறது.

இம்மகாநாடு நாட்டின் தென்கோடியில் நடப்பதானாலும் அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்ததாகும். தேசம் இந்திரா காங்கிரஸ் பிடியில் சிக்கியுள்ளது. இந்திராவோ கம்யூனிஸ்ட் கைப்பாவையாக இருந்து வருகிறார். தேசத்தில் ஜனநாயகத்துக்கே ஆபத்து வரவிருக்கிறது. அதை நாட்டு மக்களுக்கு எச்சரிக்கை செய்யவே தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் பெரும் தலைவர்கள் இம்மகாநாட்டில் கலந்து கொள்ள வருகிறார்கள்.

இம்மகாநாட்டுக்குத் தமிழக சுதந்திரக் கட்சித் தலைவர் திரு ஜி. கே. சுந்தரம் எம்.பி. தலைமை வகிக்கிறார். சுதந்திரக் கட்சியின் அகில இந்தியத் தலைவர் ஸ்ரீ மஸானி அவர்கள் இம்மகாநாட்டைத் தொடங்கவிருக்கிறார். மற்றும் என். ஜி. ரங்கா எம். பி., ஒரிஸ்ஸா முதல்வர் ஸ்ரீ ஆர். என். சிங்தேவ், ஸ்ரீ பிலுமோடி, ஸ்ரீ எச். பி. ஜுன்வாலா ஆகியோரும் மகாநாட்டில் தங்களது ஆய்ந்த, தேர்ந்த கருத்துக்களை வெளியிடுவார்கள். இம்மகாநாட்டில் கலந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதித் தொடர்பு கொள்ளலாம்: திரு டி. டி. சீனிவாசன், செயலாளர், தமிழ்நாடு சுதந்திரக் கட்சி மாநில மாநாடு, நெ. 3, வெங்கட்ராய் ரோடு, சேலம்-1.

சுதந்திரக்கட்சியின் சிறப்புப் பணி ஓங்க மகாநாடு பூரணமாக உதவுமாக! மக்கள் பெருமளவில் இம்மகாநாட்டில் கலந்து கொண்டு அதனை வெற்றிகரமாக்கித் தருவார்களாக!

## சந்திரனில் டிராக்டர்

ருஷ்யா விண்வெளி விஞ்ஞானத்தில் மற்றோர் அற்புத சாதனை புரிந்துள்ளது. அந்தச் சாதனையைப் பார்த்து அமெரிக்கா, விண்வெளி விஞ்ஞானப் போட்டியில் — இந்த அம்சத்தில் — ருஷ்யா தன்னை மிஞ்சி விட்டது என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டு பாராட்டி உள்ளது.

லூனா-17 என்ற விண்வெளிக் கப்பல் சந்திர மண்டலத்தை அடைந்தது. அதிலிருந்து லூனகோடி — 1 என்ற எட்டுச் சக்கர டிராக்டர் சந்திர மண்டலத்தில் இருபது மீட்டர் தூரம் சென்றது. பூமியிலிருந்து, அந்த டிராக்டருக்கு அனுப்பிய கட்டளைகளை அது சரிவர நிறைவேற்றியுள்ளது.

மனிதர்கள் இல்லாமலேயே, பூமியிலிருந்த வாக்கிலேயே, அவ்வளவு தூரத்தில் சந்திரனில் இயந்திரங்களை இயக்கலாம் என்பதை ருஷ்யா நிரூபித்து விட்டது! பொறி இயல் துறையில் மகத்தான சாதனை புரிந்துள்ள ருஷ்யாவை உலகமே வியந்து பாராட்டுகிறது!

# ராஜாஜியின் கருத்துக்கள்

தினமும் செய்தித் தாள்களில் நக்ஸலைட் கொலைகள் பற்றிச் செய்திகள் வந்தவண்ணமாயிருக்கின்றன. சுதந்திரத்துக்கு முன்பு பிரிட்டிஷ் அதிகாரிகள் இந்தியாவை ஆண்டு வந்தபோது, இப்போது நாம் அவலமாக அநுபவிப்பது போன்ற அராஜக வன்முறைகளைப் பதினைந்தே நாட்களில் தடுத்து நிறுத்தியிருப்பார்கள். 'வங்காள ராஜ்யம் முழுவதிலும், (கேரளத்திலும்) இதுபோல் அராஜகம் பரவ அநுமதிப்பதற்குக் காரணம் மத்திய சர்க்கார் கம்யூனிஸ்டுகளின் ஆதரவைச் சார்ந்திருப்பதுதான்' என்று 'மெயில்' பத்திரிகை கூறுகிறது. இந்தக் கூற்றை மிகைப்படக் கூறியதாகவோ, அநியாயமாகக் கூறியதாகவோ கருதுவதற்கில்லை.

இன்று தேச நடப்புக்களை நிர்வகிக்கும் தலைவர்கள் நான் சொல்லுவதைக் கேட்டாலும் சரி, கேட்கா விட்டாலும் சரி, என் எச்சரிக்கையை விடுக்கிறேன். அதாவது, நாட்டிலுள்ள பலவிதமான கம்யூனிஸ்ட் கட்சிகளையும் தாட்சண்யம் இன்றித் தடை செய்தாலொழிய, நம் தேசத்துக்குப் பாதுகாப்பு இல்லை; நம் மக்களுக்குப் பந்தோபஸ்தும் இல்லை. கம்யூனிஸ்டுகளிடையே இருக்கும் பல பிரிவுகள் வெறும் மாயமே. தனி மனித சுதந்திரத்துக்கும், தேசச் சுதந்திரத்துக்கும் விரோதிகளான இவர்களில் எவரைச் சார்ந்திருந்தாலும் அது முட்டாள்தனமாக நம்மை நாமே விபரீதத்தில் ஆழ்த்திக் கொள்வதே ஆகும்.

பதவியை விடாமல் பிடித்துக் கொண்டிருப்பதில் உள்ள கெட்டிக்காரத்தனம் மட்டும் பிரதமருக்குப் போதாது. உரியபடி நாட்டை ஆள்கிற ஆற்றல் அவருக்குப் போதவில்லை. நக்ஸலைட் குற்றங்களை நசுக்குவதற்குச் சகல அதிகாரமும் தர மக்கள் விருப்பமுடன் இருக்கிறார்கள்.

★

பார்லிமெண்டில் எதிர்க்கட்சிகளை இணைப்பது குறித்துக் கமிட்டி நிறுவுவது பற்றிப் பத்திரிகை அறிக்கைகள் கூறுகின்றன.

ஜீவராசிகள் படிப்படியாகப் பரிணமித்து மனிதன் தோன்றினான் என்று டார்வின் கருதியது போல், அரசியல் கட்சிகள் படிப்படியாகப் பரிணமித்து ஜனநாயக முன்னணி ஏற்பட வேண்டும் என்று ஸ்ரீ நிஜலிங்கப்பா நம்புகிறார் போலும்! அதில் எனக்கு ஆட்சேபம் இல்லை. ஆனால் அவர் டார்வின் சித்தாந்தக்காரர்களிடம் இந்தப் பரிணமம் ஏற்பட எவ்வளவு நீண்ட காலம் பிடித்தது என்பதை அறிந்து கொண்டால் நல்லது. எதிர்க்கட்சிகளின் முன்னணி அமைப்பதில் தற்போது காணப்படும் ஒரு குறை யாதெனில் சக்தி நிரம்பிய ஒரு பொதுத் தலைவரை ஏற்கத் தயங்குவதுதான். வெவ்வேறு தலைவர்களின் முக்கியத்துவம் மங்கிவிடுவது பெரிய அபாயம் என்பது போன்ற உணர்வு நிலவுகிறது. இந்த உணர்ச்சி வேகத்தில், மெய்யாகவே ஜனநாயகத்துக்கு ஏற்பட்டுள்ள பெரிய அபாயமான கம்யூனிஸத்தைப் பற்றித் தீவிர கவனம் இல்லாதிருப்பது பெரிய துரதிருஷ்டமாகும்.

★

அமெரிக்காவில் பால் உணர்ச்சியைத் தூண்டும் இலக்கியம், சினிமா, பழக்க வழக்கம் முதலியன குறித்து ஆராய்ந்த கமிஷன், இதனால் நாட்டின் போக்குப் பாதிக்கப்படாது என்று கூறி, இத்துறையில் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்திருந்தது. ஆனால் ஜனாதிபதி நிக்ஸன், கமிஷனின் சிபாரிசை ஏற்கத் திட்டவட்டமாக மறுத்துவிட்டார். 'தார்மிகத்தின் திவாலா நிலைமை'யையே கமிஷனின் அறிக்கை வெளியிடுகிறது என்றார் ஸ்ரீ நிக்ஸன்.

அவர் மேலும் கூறியதாவது: "நான் ஜனாதிபதி மாளிகையில் உள்ள வரையில், நம் தேச வாழ்வில் அழுக்கைக் குவிக்கும் செயலைத் தடுப்பதில் சிறிதும் தளர்ச்சியிராது. வானவெளியையும், குடிநீரையும் விஷமாக்குவதற்குச் சமமே, நமது நாகரிகத்தை ஆபாசத்தால் குலைப்பதும். பாலுணர்ச்சி இலக்கியம் முதலியவை மக்களைப் பாதிக்காது என்றால், மகத்தான இலக்கியங்களும் சித்திரங்களும் மக்களை உயர்த்துவதும் இயலாது என்றேயாகும். இது எவ்வளவு தவறு என்றறிய நாகரிக சரித்திரத்தின் பல நூற்றாண்டுகளைப் பார்த்தால் தெரியும்; அல்லது ஒரு மனிதனின் நடத்தையில் பத்தே நிமிஷங்களில் ஏற்படும் எதிர் விளைவுகளைப் பார்த்தாலும் போதும்."

நிக்ஸன், ஆண்டவனுக்குப் பிரியமான சத்தியத்தையே சொல்லியிருக்கிறார்; இதில் அரசியல் கலப்பே இல்லை.

★

பாகிஸ்தானின் புயல் கஷ்ட நிவாரணத்துக்கு ஸ்ரீமதி இந்திராகாந்தி அவசர உணர்வுடன் வழங்கிய தாராளமான உதவிக்கும், அநுதாபத்துக்கும் என் பாராட்டுக்கள். இயற்கை விளைவிக்கக்கூடிய அபாயங்களின் முன்பு நம்முடைய முரண்பாடுகளும் சர்ச்சைகளும் எவ்வளவு அற்பமானவை என்பதைக் கிழக்குப் பாகிஸ்தான் புயல் நமக்கு உணர்த்துகிறது. பாகிஸ்தானின் மகத்தான துரதிருஷ்டத்தைச் சிறிதேனும் குறைப்பதற்காக ஸ்ரீமதி இந்திரா காந்தி வழங்கிய நன்கொடையைக் காட்டிலும் வேறு சிறப்பான பிரயோஜனம் ஏதும் பிரதமரின் நிதிக்கு இருக்க முடியாது!

## வெள்ளிவிழா கொண்டாடும்

# ஹேவர் டிரேடிங் கம்பெனி 1945 -70

இரண்டாவது உலகப் போரின் இறுதி ஆண்டு 1945ல் துவக்கப்பட்ட ஹேவர் வர்த்தகக் கம்பெனி சிறிதாகத் துவக்கப்பட்டு இப்போது பெரிய ஸ்தாபனமாகவே வளர்ந்துள்ளது. அதன் வர்த்தகப் பிணைப்புகள் இந்தியா முழுவதிலும் பரவியுள்ளன.

கச்சா பண்டங்களை ஏற்றுமதி செய்து, ஆலை உற்பத்திப் பொருள்களை இறக்குமதி செய்யும் பொருளாதாரச் சூழ்நிலையில் தோன்றிய ஹேவர் டிரேடிங் கம்பெனி மக்களுக்குத் தேவைப்பட்ட டப்பா பால், டப்பா வெண்ணெய், பாலாடைகள், பால் பவுடர், குழந்தை உணவு, காகிதம் போன்ற பொருள்களை ஆரம்ப ஆண்டுகளில் இறக்குமதி செய்து விநியோகம் செய்து வந்தது.

நாடு சுதந்திரம் பெற்ற பிறகும்கூட, சில காலத்துக்கு இறக்குமதி வர்த்தகத்தையே தமது முக்கிய அலுவலாகக் கொண்டிருந்தது ஹேவர் டிரேடிங் கம்பெனி. ஆனால் காலப் போக்கில் நம் நாட்டிலேயே பல புதிய தொழில்கள் தோன்றத் தொடங்கியதாலும் அன்னியச் செலாவணியைச் சேமிப்பதற்காக அயல்நாட்டிலிருந்து இறக்குமதி கட்டுப்படுத்தப்பட்டதாலும் ஹேவர் டிரேடிங் கம்பெனியும் தனது வர்த்தகத்தை உள்நாட்டுப் பொருள்களை விநியோகம் செய்வதில் கொஞ்சம்கொஞ்சமாக மாற்றிக் கொண்டது.

இந்த மாற்றுப் போக்கை மிகத் திறமையுடனும் தீர்க்கதரிசனத்துடனும் நாட்டுக்குப் பயன்படும் வகையில் தமக்கு லாபகரமாக இருக்கும்படி நிர்ணயித்து வெற்றிகரமாகச் செயலாக்கிய பெருமை முற்றிலும் திரு எஸ். வி. நரசிம்மனையே சேரும்.

நாட்டின் கேந்திரத் தொழில்களுக்கு அத்தியாவசியமாகத் தேவைப்படும் பொருள்களைத் தேர்ந்தெடுத்து விநியோகம் செய்வதில் திரு நரசிம்மன் தமது அசாதாரண வர்த்தக உணர்வைப் பயன்படுத்தி வந்தார். சொன்ன கெடு தவறாமல் பொருள்களை 'சப்ளை' செய்வதிலும், தரக் குறைவில்லாத சாமான்களை வழங்குவதிலும் திரு நரசிம்மனின் புகழ் பலரால் போற்றப்பட்டது.

இறக்குமதி வியாபாரத்திலிருந்து ஏற்றுமதி வர்த்தகத்துக்குத் தமது ஹேவர் டிரேடிங் கம்பெனியைத் திருப்பியதும் அந்தமான், நிகோபார் தீவுகளுக்கெல்லாம் எங்கும் பொருள்களும் இதர பொருள்களும் அனுப்பி அந்தப் பிரதேசத்தை வளமுள்ள நாடாக மாற்ற ஹேவர் டிரேடிங் கம்பெனி புரிந்த பணி உயர்வானது. போர்ட் பிளேர் துறைமுகத்திலிருந்து அரசாங்கத் துறையினர் பலருக்கு ஏற்றுமதி செய்யும் பொறுப்பையும் அவர்களுக்கு வேண்டிய பொருள்களை அனுப்பி வைக்கும் பணியையும் ஹேவர் டிரேடிங் கம்பெனி மேற்கொண்டதுடன் அவற்றைக் குறைவின்றி நிறைவேற்றி வைத்தது.

தமிழகத்துப் பாரி கம்பெனியார் தயாரிக்கும் பீங்கான் பொருள்கள், ஜாடிகள் அனைத்துக்கும் ஹேவர் டிரேடிங் கம்பெனி தான் விநியோகஸ்தர்கள். இதைத் தவிர நெல்லிக்குப்பத்தில் பாரி கம்பெனியார் தயாரிக்கும் எல்லாவகை மிட்டாய்களுக்கும் ஹேவர் டிரேடிங் கம்பெனி விநியோகஸ்தராகப் பணியாற்றுகின்றனர்.

உத்தரப் பிரதேசத்தில் முஜபர்பூரிலுள்ள இந்தோதான் பால் பொருள்கள் உற்பத்திக் கம்பெனியின் ''இந்தாஜு'' பெயருள்ள வெண்ணெய்ப் பால் பவுடரும், டப்பாப் பால் பவுடரும், கட்டிப் பாலும், இந்தக் கம்பெனி பெருவாரியாக விநியோகம் செய்கிறது.

சென்னை வால்டாக்ஸ் தெருவிலுள்ள சுருள் கதவுகளைத் தயாரிக்கும் டயாஜு 'ரோலிங் ஷட்டர்ஸ் கம்பெனி' ஹேவர் டிரேடிங் கம்பெனியின் இணைக் கம்பெனியே. இக் கம்பெனியில் திரு நரசிம்மனுக்குக் கணிசமான பங்கும், அக்கறையும் உண்டு. திரு நரசிம்மனின் ஊக்கத்தினால் இறக்குமதியாகிக் கொண்டிருந்த சுருள் கதவுகளுக்குப் பதில் பெருவாரியான உள்நாட்டுக் கதவுகள் இப்போதெல்லாம் பரவலாக விநியோகிக்கப்படுகின்றன.

கல்கத்தாவில் ஆரம்பிக்கப்பட்ட இக் கம்பெனிக்கு இப்போது பம்பாய், சென்னை நகரங்களில் சொந்த கிளை அலுவலகங்களுடன் அந்தமான் தீவு உள்பட நாட்டின் இதர எல்லா இடங்களிலும் தக்க பிரதிநிதிகளை நியமித்திருக்கிறார் திரு நரசிம்மன்.

இவ்வாறாகக் கடந்த 25 ஆண்டுகளில் மிக விரிவாக வளர்ந்துவிட்ட ஹேவர் டிரேடிங் கம்பெனி சென்ற காலத்தை விட வருங்காலம் மேலும் சிறப்புடையதாக வளர முழுமூச்சுடன் உழைக்கும் என்று இவ்வளவு விரிவாக வளர்வதற்குக் காரணமாக அன்றுமுதல் இன்று வரையில் விளங்கும் இக்கம்பெனியின் முதல்வர் திரு நரசிம்மன் உறுதி கூறுகிறார்.



திரு எஸ். வி. நரசிம்மன்

ADVT.




ஃப்ளூரோ கார்பன் முனை கொண்ட

# பிரின்ஸ்

ப்ளூ பிளேடுகளை உபயோகியுங்கள்

MA-P-TAM-1007

# அடைக்கலம் கோரும் ஆமை

நிதானமான, பயந்த சுபாவமுடைய மிருகம் ஆமை என்று நினைக்கிறோம். கிட்டத்தட்ட எல்லா ஆமைகளும் ஒரேமாதிரிதான் தோற்றமளிக்கும் என்று கருதுகிறோம். ஆனால் உண்மை இதற்கு நேர் மாறானது. பல ரகங்கள், பல நிறங்கள், பல அளவுகள் கொண்ட ஆமைகள், பலவித சுபாவங்கள் உடையன.

பெரும்பாலான ஆமை இனங்கள் சிறியவை; எளிதில் தூக்கிவிடலாம். லெதர் பாக் எனப்படும் ஆமை அரை டன் எடையுள்ளதாக வளர்கிறது. ஒன்பதடி நீளமுடையது. அதன் துடுப்புப் போன்ற முன்னங் கால்களை நீட்டி வைத்து அளந்தால் அகலத்திலும் ஒன்பதடிக்கு மேலேயே இருக்கும். மணிக்கு இருபது மைல் வேகத்தில் நீந்தும் திறமை படைத்தது.

சமுத்திரத்தில் வாழும் ஆமைகள் மட்டுமல்ல; மஸ்க் டர்ட்டில் எனப்படும் நிலம்வாழ் ஆமையும் சுறுசுறுப்பானது. அது மரத்தில்கூட ஏறும்!

பல இன ஆமைகள் பயங்கரமாகப் போராடும் சுபாவம் கொண்டவை. லாகர்ஹெட் என்ற வகை ஆமை ஒன்று தப்பி ஓடிவிடவே படகிலிருந்தபடி ஆறு மனிதர்கள் அதனைப் பிடிக்க முயன்றார்கள். அது அரை டஜன் துடுப்புக்களை உடைத்தது; ஒருவனைப் படுகாயப்படுத்திவிட்டுத் தனக்கு எவ்விதத் தீங்குமின்றித் தப்பிவிட்டது!

இந்த லாகர்ஹெட் இனம் அழியாமல் இருப்பதற்குக் காரணம், அதன் பெரிய அளவு, பலம், ஆத்திர சுபாவம் முதலியன என எண்ணலாம். ஆனால் இவற்றைவிட முக்கியமான காரணம் இவை உண்ண ருசியற்றவை என்பதுதான்! டர்ட்டில் சூப் பலருக்கு ரொம்பப் பிடித்திருக்கும் காரணத்தால் கிரீன் டர்ட்டில் என்ற ஆமை இனமே மறைந்து வருகிறது. இதேபோல் சிறிதும் பெரிதுமான வேறு பல ஆமை இனங்களும் பூண்டோடு அழிந்து போகவிருக்கின்றன. ஏனெனில் அவையோ அல்லது அவற்றின் முட்டைகளோ பலருக்கும் சப்புக்கொட்டிச் சுவைக்கும் படியாக உள்ளன!

நூறு ஆண்டுகள் ஆமை வாழ்வது சகஜம். செஷெல்ஸ் ஆமை மோரிஷஸ் தீவுக்குக் கொண்டு வரப்பட்டு 152 ஆண்டுகள் வாழ்ந்தது. அதன் பின்னரும் அது உயிர் துறந்ததற்கு ஒரு விபத்துத்தான் காரணமாயிற்று. இதைவிட அதிக காலம் உயிர் வாழ்ந்த ஆமைகள் உண்டு என்று கூறப்படுவதை நம்புவதற்கில்லை. ஆமை ஓடுகளில் தேதிகளைச் செதுக்குவது ஒரு விளையாட்டு. சில ஆமை ஓடுகளில் கிறிஸ்து பிறப்பதற்கு முற்பட்ட தேதி கூடச் செதுக்கப்பட்டிருக்கும். இவ்விஷமத்தனத்தை உண்மை என்று கருதி ஏமாறலாமா?

கனமான, அழுத்தமான ஓடு ஆமைக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. தலையையும் கால்களையும் உள்ளே இழுத்துக்கொள்ளும். சில ஆமை ரகங்களுக்குக் கனமான தோலே ஓடு போன்ற அமைப்பில் இருக்கும். வேறு சில வகை ஆமைகளால் தலையையும் கால்களையும் முழுமையாக ஓட்டுக்குள் இழுத்துக்கொள்ள இயலாது. இவ்வகை ஆமைகள் தற்காப்புக்காக அதிகமாகப் போராட வேண்டியிருக்கிறது. ஆகவே முரட்டுக் குணமுடையவையாக விளங்குகின்றன.

அமெரிக்காவில் வாழும் பாக்ஸ் டர்ட்டில், ஓட்டுக்குள் பதுங்கினால் பின்னர் காற்றுகூடப் புக முடியாது அதனுள்! இதனால் மூச்சு முட்டி அது இறந்துவிடாது. ஏனெனில் ஓய்வாக இருக்கும்போது ஆமைக்குப் பிராணவாயு அதிகமாகத் தேவைப்படுவதில்லை.

எலும்பினாலான பெட்டிக்குள் வசிக்கும் ஆமை மூச்சு விடுவது எப்படி? நம்மைப் போல் நெஞ்சைப் புடைக்கச் செய்ய அதனால் முடியாதே?

அது தன் உணவுக் குடலை அசைத்தும் தலையை முன்னும் பின்னுமாக அசைத்தும் நுரையீரல்களைச் சுருங்கி விரியச் செய்கிறது.

சில இன ஆமைகளின் கழுத்திலுள்ள தோல், நீரிலிருந்தும் காற்றிலிருந்தும் பிராண வாயுவைக் கிரகிக்கும் சக்தி கொண்டதாய் இருக்கும். நீருக்குள்ளேயே நீண்ட நாட்கள் இவை வாழ்வது சாத்தியமே; ஆனால் அதிகமான சலனம் இருக்காது — அமைதியாகப் படுத்துக் கிடக்கும்.

—மைக்கேல் ஆர்னல்டு



மேற்கு ஜெர்மனி மிருகக்காட்சிசாலையில்.....

படம்: யு. பி. ஐ.

திருச்சி மாநகருக்குத்தான் எத்தனை பெருமைகள்! ஒரு காலத்தில் தன்னை அடுத்த உறையூரைச் சோழப் பேரரசின் தலைநகராக்கிக் கொண்ட பெருமை....

அவ் உறையூரில் ஒரு நாச்சியாரைப் பெற்று, அவள்பால் ஸ்ரீரங்கநாதரையே மையலுறச் செய்து ஓடி வரச் செய்த பெருமை.....

திருவானைக்காவைத் தன்னருகே அமர்த்திக் கொண்ட பெருமை....

தாயுமானவர் கோயிலை நடுநாயகமாகக் கொண்ட பெருமை....

எல்லாவற்றுக்கும் மேலாக உச்சிப் பிள்ளையாரை மலை உச்சியில் உட்கார வைத்துத் தான் உயர்ந்த பெருமை....

....இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். ஆனால் இத்தனை பெருமைகளுக்கும் இணையாக அது இன்னொரு பெருமையையும் அடைந்தது.

அந்தப் பெருமை அதற்குக் கிட்டியது, 1886ம் ஆண்டு ஆகும்.

அந்தப் பெருமை அதற்குக் கிட்டக் காரணம் ஆங்கிலேயர்களின் ஆட்சியே.

'காக்கை உட்காரவும் பனம் பழம் விழவும்' என்ற கதையாக அந்த நிகழ்ச்சி நிகழவில்லை.

இந்திய தேசிய காங்கிரஸ் தோன்றிய அடுத்த ஆண்டிலேயே, திருச்சி மாநகரம் தேசியக் கல்விக்கூடம் ஒன்றைத் தன் இதயஸ்தானத்திலே தோற்றுவித்துக் கொண்ட பெருமையைத்தான் கூறுகிறோம். தற்செயலான நிகழ்ச்சி என்று கூறி அதைப் புறக்கணித்து விட முடியாது. தேர்ந்து தெளிந்து எடுத்த முடிவு என்றே அதனைக் கொள்ள வேண்டும்.

காலஞ்சென்ற சேஷ ஐயங்கார், பி. எஸ். வேங்கடரமண சர்மா, பி. ஜி. சுந்தரேச சாஸ்திரிகள் — இம்மூவரும் ஆசிரியப் பணியைத் தம்தொழிலாகக்கொண்டிருந்தவர்கள்.

## பொன்விழாக் காணும் தேசியக் கல்லூரி

இம்மூவரும் விளையும்பயிர்களின் உள்ளங்கள் கருகத் திருவுள்ளம் கொள்ளாமல், அதனைப் போற்றிப் பாதுகாக்க, பேணி வளர்க்கத் திட்டமிட்டார்கள். 'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்; பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்' என்று உறுதி பூண்ட பாரதியின் அடிச்சுவட்டிலே செல்லத் தலைப்பட்டார்கள். பலன், பாரதத்திலேயே முதன் முதலாகத் தேசியக் கல்விச் சாலை ஒன்றினை நிறுவும் முதற் பெருமையைத் திருச்சிராப்பள்ளி மாநகரம் பெற்றது.

இந்த முடிவை எடுத்தவர்களோ நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். முன்னும் போக முடியாமல், பின்னும் போக முடியாமல் பல்வகைக் கஷ்டங்களுக்கு இலக்கானவர்கள். ஆயினும் உறுதியோடு தாம் மேற்கொண்ட பணியில் இறங்கி விட்டார்கள். எனவே, அவர்கள் தங்கள் வாழ்வை எப்படி வெல்லாமோ தியாகம் செய்ய நேர்ந்தது.











இந்தத் தியாகத்துக்கு ஈடாக எதைச் சொல்ல? விதை நெல்லின் தியாகத்தைத் தான் ஒப்பிட வேண்டும். அதன் தியாகம் தான் தியாகங்களுக்கெல்லாம் தலையாயது. ஏனெனில், அது தன்னைத் தானே அழித்துக் கொண்டு தன்னைப் போன்ற எத்தனை எத்தனை நெல் மணிகளை நல்கி மகிழ்கிறது! அதைப் போலவே அவர்களது பணி நாட்டுக்குப் பல தேசத் தொண்டர்களை நல்கியது. எனவே,

---

1. பிரின்ஸிபால் திரு எம். கே. வேங்கடராமன்.
2. தேசியக் கல்லூரி நிர்வாகக் கமிட்டி காரியதரிசி திரு என். என். சேஷாத்திரி.
3. பொன்விழாக் கமிட்டி காரியதரிசி டாக்டர் திரு ஏ. தர்மராஜன்.
4. பழைய மாணவர் சங்கக் காரியதரிசி ஆடிட்டர் திரு கே. சந்தானம்.
5. பழைய கல்லூரியின் ஸரகவதி ஹாலும், முன் தோற்றமும்.

அவர்களது பணி நெல்மணியின் பணிக்குக் குன்றிமணி அளவுகூடக் குறைந்ததல்ல.

அவர்கள் நிறுவிய உயர்நிலைப் பள்ளிதான் மக்களின் மனத்திலே இடம் பெற்று, வலுமிருந்த கல்விக்கூடமாக உருவாகி 1919ம் ஆண்டு இரண்டாம் படிவக் கல்லூரியாக — இண்டர் வரை கல்வி புகட்டும் நிறுவனமாக வளர்ந்தது. இதன் முதல் முதல்வராகப் பொறுப்பேற்றவர் கே.ராமானுஜாச்சாரியார் ஆவார். பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற இவர், இராம — இலட்சுமணரைப் போன்ற கல்வியில் இரட்டையரைத் தமது உதவியாளர்களாகக் கொண்டார். ஸ்ரீ வி. சாரநாதனும், ஸ்ரீ அ. ராம ஐயர் அவர்களும், இந்தக் கல்லூரியின் இரு தூண்களாகவே விளங்கினார்கள். ராமானுஜாச்சாரியாரை அடுத்துச் சாரநாதன் கல்லூரியின் முதல்வராகப் பதவியேற்றார். 1921ம் ஆண்டு தொடங்கி ஒரு வெள்ளிவிழா ஆண்டுக்கும் மேலாகத் தாம் மேற்கொண்ட பொறுப்பைத் திறம்பட வகித்தார்.

களுக்கு அபராதம் விதித்தாக வேண்டிய நிலை ஏற்பட்டும் அபராதம் விதிக்கவில்லை. அதே சமயம் அபராதம் விதித்ததாக ஒரு கண்துடைப்பு நாடகமும் நடத்தியது! தேசிய உணர்வைக் கல்லூரியில் காப்பாற்றுவதற்காகச் சாரநாதன் கையாண்ட வழி அது! அந்தக் காலத்து அரசாங்கத்தின் கண்ணிலே இப்படி மண்ணைத் தூவித் தேசியத்தை வளர்த்தார் சாரநாதன். மற்றக் கல்லூரிகளுக்கு அளித்து வந்த பொருளுதவியை அந்நிய ஆட்சி தேசியக் கல்லூரிகளுக்குத் தர ஒப்புமா? எனவே, கல்லூரி 1931ம் ஆண்டு வாக்கில் பலத்த பொருளாதார நெருக்கடிக்கு உட்பட்டது. தியாகசீலரான சாரநாதன் தமது சம்பளத்தைப் பாதியாகக் குறைத்துக் கொண்டதோடு, தமது சகாக்களையும் அதற்கு உடன்படுத்தித் தியாகத் தீயில் புடம் போட்டு எடுத்தார்.

எத்தனையோ தேசத் தலைவர்களை வரவேற்றிருக்கிறது இந்தத் தேசியக் கல்லூரி. தேசத் தந்தை காந்திஜியின் புனித பாதங்கள் படும் பேற்றையும் பெற்றிருக்கிறது.



பொன்விழாக் கட்டடங்களின் வேலை துரிதமாக முன்னேறிக் கொண்டிருக்கிறது.

இவர் காலத்தில் இக்கல்லூரி கண்ட பாலாரிஷ்டங்கள் எத்தனை எத்தனையோ! அத்தனையையும் தமது தளராத நம்பிக்கையினாலும் நிர்வாகத் திறமையினாலும் கல்வி புகட்டும் ஆற்றலினாலும் தாண்டிப் பாரத நாட்டின் கவனத்தையே கவர்ந்தார்.

கடலின் நடுவே எழும் அலை கரையையும் தொடத்தானே செய்கிறது? அது போலத் தேசிய இயக்கம் நாட்டு மக்களை மட்டும் அல்ல; மாணவர்களையும் கவர்ந்தது. காட்டுத் தீயெனக் கல்விக்கூடங்களிலும் படர்ந்தது. கிறிஸ்தவர் நடத்தும் கல்லூரி, அந்நியர் நடத்தும் கல்லூரி என்றெல்லாம் அது பாகுபாடு பார்க்கவில்லை. ஆனால் அரசாங்கச் சார்புள்ள கல்லூரிகளோ தன்மானத்தைக் காத்துக் கொள்ள — அதாவது தங்கள் கல்லூரிகளில் தேசியக் காற்று வீசவில்லை என்று காட்டிக் கொள்ள மாணவர்களுக்கு அபராதம் விதிக்காமல் விட்டு விட்டன.

ஆனால் தேசியக் கல்லூரி என்று பெயர் பெற்ற சாரநாதன் கல்லூரியோ மாணவர்

வேப்பிலைச் சட்டினிப் பிரியரான காந்தியடிகள் இந்தக் கல்லூரிக்கு விஜயம் செய்த பொழுது, ஒரு வேப்ப மரத்தினடியில் அமர்ந்து தான் நல்லுரை வழங்கினார். அன்று முதல் அந்த வேப்ப மரத்துக்குக் காந்தி மரம் என்று பெயர் வழங்கலாயிற்று.

இப்படி யெல்லாம் பணி புரிந்த இந்தக் கல்லூரி எத்தனையோ தேசபக்தர்களைத் தயாரித்து நாட்டுக்குத் தந்துள்ளது. பேராசிரியர் கல்கி அவர்கள்கூட இந்தக் கல்லூரி நிழலில் தேசியம் பயின்றவர்தான்.

ஒரு சமயம் இக்கல்லூரியின் ரசாயனத் துறைப் பேராசிரியர் தில்லி சென்றிருந்த பொழுது, நேருவைக் காணும் வாய்ப்பைப் பெற்றாராம். 'திருச்சி தேசியக் கல்லூரியிலிருந்து வருகிறேன்' என்று இவர் சொன்னதும், ''சாரநாதன் கல்லூரியிலிருந்தா?'' என்று கேட்டாராம் நேருஜி.

சாரநாதனின் காலத்தில், அவருடன் பணியாற்றும் பேறு பெற்ற அந்தப் பேராசிரியருக்கு உள்ளம் புல்லரித்தது.

'சாரநாதனின் புகழ் எவ்வளவு தூரம் பரவியிருக்கிறது? சாரநாதன் கல்லூரி என்றே இதற்குப் பெயர் மாற்றம் செய்திருக்கலாமோ?' இந்தக் காலத்து மூளையாக அவர் மூளையும் இயங்கியது.

ஆனால் அப்படி மாற்றுவதைச் சாரநாதனின் ஆன்மாவே ஏற்காது என்பதை அவர் உணர்ந்திருக்கவேண்டும். ஏனெனில், தேசியம் என்றாலே சாரநாதனின் நினைவு வரும் அளவுக்குத் தேசப் பணி புரிந்துவிட்ட சாரநாதன், அந்தத் தேசியத்துக்கு அதிக மகத்துவம் தருவாரே யொழியத் தம் பெயருக்குப் பெருமை சேர்க்க முற்படமாட்டார். அப்படித் தேசியத்தோடு ஒன்றிய சாரநாதனின் பெயர் தேசியக் கல்லூரி உள்ள அளவுக்கும் நிலைத்து நிற்கும் என்றால், அவர் பெயர் என்றென்றும் நிலைத்துவிட்டது என்று தானே பொருள்?

அவரை அடுத்து அவருக்கு நிகராகவே முதல்வர் பொறுப்பை ஏற்றுக் கல்விப் பணி புரிந்தவர் ஸ்ரீ அ. ராம ஐயர். மொழியைப் போதிப்பதிலும் காந்தியத்தை வளர்ப்பதிலும் அவருக்கு இணை அவர்தான். எனவே, இவ்விரு முதல்வர்களின் பெயரையும் திருச்சி தேசியக் கல்லூரி நினைக்காத நாள் இராது.

1924ம் ஆண்டு இக்கல்லூரி முதல்படிவக் கல்லூரியாக உயர்ந்தது. பட்டப் படிப்பில் பல கிளைகளும் துறைகளும் தொடங்கப்பட்டன. கல்வி புகட்டுவதில் நிகரற்று விளங்கிய இக்கல்லூரி படிப்படியாக உயர்ந்து ஓங்கியது. 1959ம் ஆண்டுவாக்கில் இடநெருக்கடி இதனை நெருக்கியது. இந்த இட நெருக்கடிக்குக் காரணம்......?

இதோ பௌதிகத் துறைப் பேராசிரியர் கூறுகிறார், கேளுங்கள்: ''ஐயா! அன்று பத்தொன்பதே போதகர்களைக் கொண்டு தொடங்கியது இக்கல்லூரி. இன்று என் பௌதிகத் துறை ஒன்றுக்கே பத்தொன்பது ஆசிரியர்கள் இருக்கிறோம். மற்றுமுள்ள துறைகளை நீங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள்!''

அநுபவம் முதிர்ந்த பேராசிரியர் அவர். அவரைச் சுற்றிப் பதினெட்டு இளைஞர்கள். அவரிடமே பயின்று பட்டம் பெற்று அவருக்குக் கீழேயே பணி புரிபவர்கள் பெரும்பாலானவர்கள். 'இதெல்லாம் என் வளர்ப்புக்கள்!' என்று இன்முகத்தோடு கூறிப் பெருமிதம் கொள்கிறார் அவர்.

மாணவர்களின் எண்ணிக்கையும் பல்வேறு கல்வித்துறைகளும் புதிதாக வளரவே, இடமாற்றம் செய்வது அத்தியாவசியமாகிவிட்டது. அதன்பொருட்டு அந்த நாளையக் கல்லூரி நிர்வாகக் குழுச் செயலாளர் அண்ணாத்துரை ஐயர் எடுத்துக் கொண்ட பெருமுயற்சி பலித்தது.

திருச்சி ஜங்ஷனிலிருந்து கூப்பிடு தூரத்தில் உள்ள விஸ்தாரமான இடத்துக்குக் கல்லூரி குடிபெயர்ந்துள்ளது. திருச்சி திண்டுக்கல் சாலையில் ஒருசில பர்லாங்குகள் நடந்தால் வலது கைப்புறத்தில் புதிய கட்டடம் பிரும்மாண்டமாக உருவாவதையும் அதன் பகைப்புலனில் பெரிய கட்டடங்கள் நிமிர்ந்து நிற்பதையும் காணலாம். இடது கைப்புறம் திரும்பினால் மாணவர்கள் விடுதி தென்படும்.

அன்றையத் தேசியக் கல்விக்கூடம் வளர நீதிபதி டி. வி. சேஷகிரி ஐயர், ஸர் டி. தேசிகாச்சாரியார் போன்ற பேராதரவாளர்கள் பாடுபட்டார்கள். பெத்தாச்சி செட்டியார், ராமசாமிச் செட்டியார் போன்ற புரவலர்கள் நிதி உதவி, கட்டடம் எழுப்பினார்கள். அவர்களுக்கு நாங்கள் சளைத்தவர்கள் அல்ல என்பதே போல் இன்னும் எத்தனை எத்தனையோ 'நன்மணி'கள் 'நெல்மணி'களாக உதவியுள்ளனர்.

தேசியக் கல்லூரியின் இன்றைய ஏற்றத்துக்கு நங்கவரம் என். சேஷாத்திரி அவர்கள் செயலாளராகி ஆற்றும் சிறப்புப் பணியைக் குறிப்பிட வேண்டும். டாக்டர் அ. தர்மராஜன் போன்றவர்களும் பொன்விழாக் குழுவில் அங்கம் வகித்து எடுத்த காரியத்தை வெற்றிகரமாக்கத் திட்டம் தீட்டிச் செயலாற்றி வருகிறார்கள். எழுத்து அறிவித்த இறைக்குத் தன் நன்றியைத் தெரிவிக்கவேபோல், பழைய மாணாக்கர் சங்கம் ஒன்று ஆடிட்டர் சந்தானத்தின் செயலாற்றலைப் பயன்படுத்திக் கொண்டு வெற்றி நடை போடுகிறது.

தேசியக் கல்லூரியின் வரலாற்றைப் பார்த்தால், ஆண்டுதோறும் ஏதாவது புதுத் துறை தொடங்கப்பட்டுச் செயலாற்றுவதைக் காணலாம். பொருளாதாரம், தமிழ் போன்ற துறைகளுக்குப் போஸ்ட் கிராஜுவேட் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. தமிழ்மொழியைப் போதனா மொழியாகக் கொண்டு செயல்படும் பல வகுப்புக்களும் உள்ளன.

சைவசித்தாந்தப் பகுதி, காமகோடிப் பகுதி போன்ற பிளாக்குகள் தேசியக் கல்லூரியின் பெயரைப் புகழோடு நிலைநாட்டி வருகின்றன.

கல்லூரியில் இன்று ஏறக்குறைய 3000 மாணவர்கள் பயிற்சி பெறுகிறார்கள். 118 போதகர்கள் பாடம் எடுக்கிறார்கள். தமிழகத்துப் பெரும் கல்லூரிகளில் திருச்சி தேசியக் கல்லூரியும் ஒன்று ஆகும். இன்றைய இதன் முதல்வர் ஸ்ரீ எம். கே. வேங்கடராமன் தேசியக் கல்லூரி அந்த நாள்தொட்டு வளர்த்துள்ள பாரம்பரியத்தைத் திறம்படக் கடைப்பிடிப்பவர். அவர் சகாக்களோ அதற்கு உறுதுணையாக இருப்பவர்கள். எனவே, ஒவ்வொருவரும் தேசியக் கல்லூரியின் பொன் விழாவைத் தங்கள் வீட்டுச் சொந்த விழாவாகக் கருதிச் செயலாற்றி வருகின்றனர்.

பொன்விழாவை ஒட்டிப் பொன்விழாக் கட்டடம் ஒன்று மூன்று லட்ச ரூபாய் செலவிலும், சயன்ஸ் பிளாக் ஒன்று இரண்டரை லட்சம் ரூபாய் செலவிலும் உருவாகி வருகின்றன. ஹாஸ்டல், நூலகம் போன்ற வசதிகளும் பெருகி வருகின்றன.

பொதுமக்கள் அள்ளித் தரும் நிதியும் அரசு அளிக்கும் ஆதரவும் பொன்னுக்கு மணம் ஏற்றுவதே போல் இக் கல்லூரியின் வளர்ச்சிக்கு வகை தேடித் தரும்.

வருகிற டிசம்பர் மாதம் 3, 4, 5 தேதிகளில் திருச்சி தேசியக் கல்லூரி விமரிசையாகத் தன் பொன் விழாவைக் கொண்டாடவிருக்கிறது. இந்தப் பொன்னான தருணத்தில் நமது பொன்னான வாழ்த்துக்களையும் வழங்குகிறோம்.

— ரா. வீழிநாதன்

உ
ஓம்
ஸ்ரீ சற்குரு துணை


ஸத்குரு ஸ்ரீ
சேஷாத்ரி ஸ்வாமிகள்

# ஆ ரா த னை
# 22–12–1970
# செவ்வாய்க்கிழமை


ஸத்குரு ஸ்ரீ
குழந்தையானந்த ஸ்வாமிகள்

### ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண ஸச்சிதானந்த
### கல்யாணகுண கம்பீர
## ஸ்ரீ சேஷாத்ரிநாத ஸத்குரு ஸ்வாமிகளின்
# 42-வது ஆண்டு ஆராதனை மஹோத்ஸவம்
### ( இருபத்தெட்டாவது உத்ஸவம் )

மெய்யன்புடையீர்:

கலி 4970 சுக்கில-ஞு தை-மீ 11உ கிருஷ்ணபக்ஷ ஷஷ்டி, ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் காஞ்சியில் காமகோடியார் வம்சத்தில், பௌராகுத்ஸகோத்திரத்தில் வரதராஜ ஜோஸியருக்கும் மரகதவல்லி அம்மையாருக்கும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் கருணையால் ஞானக் கனியாய்ப் பிறந்து, இளம் வயதிலேயே ஸ்ரீ தேவியின் பரிபூர்ண அனுக்ரஹமும் அடைந்து, பின்பு தாயின் உபதேசத்தால் திருவண்ணாமலை வந்து சேர்ந்து, நாற்பது வருட காலம் ஊமைபோலும், பித்தன் போலும், பற்றற்ற சுத்த அதிவர்ணாச்ரமியாய், பல தேவாம்சம் பொருந்திய திருவிளையாடல்களைச் செய்து, தம் அருட்சக்தியால் பல பக்தர்களுக்கு இருள் இடர் நீக்கி, அருள் சுடர் ஆக்கி, மெய்யறிவூட்டி நல்வழி காட்டியருளிய

### கல்யாணகுண கம்பீர ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

விபவ-ஞு மார்கழி-மீ கிருஷ்ணபக்ஷ நவமி திதி கூடிய சுபதினத்தில மஹாஸமாதி எய்தினார்.

இருபத்தேழு ஆண்டுகளாக, யோக பீடத்தின் மூலமாகவும், ஸூக்ஷமத்திலும் பக்தகோடிகளை ஆட்கொண்டருளும் ஸ்ரீ சத்குருநாதரின் ஆக்ஞைப்படி ஊஞ்சலூரில் ஸூக்ஷமயோக ஸமாதி வைதிக முறையில் அமைத்து, வருடந்தோறும் ஆராதனை வைபவங்கள் நடைபெற்று வருகின்றன. இவ்வருடம் சங்கத்தாரால் நடத்தப்படும் 28-வது ஆராதனை உத்ஸவம் ஊஞ்சலூரில் நிகழும் ஸாதாரண-ஞு மார்கழி-மீ 2-ம் உ (17-12-70) வியாழக்கிழமை மஹோத்ஸவம் ஆரம்பித்து, ஸாதாரண-ஞு மார்கழி-மீ 7 ம் உ (22-12-70) செவ்வாய்க்கிழமை ஆராதனை வைபவம் நடைபெறும்.

### பக்தர்களனைவரும் வந்து ஈடுபட்டுக் குருபிரஸாதம் பெற்றுய்யக் கோருகிறோம்

வழக்கம்போல் ஸ்ரீ ஸ்வாமிகளாலும் மற்ற மகனீயர்களாலும் அருட்கருவியின் மூலம் கதா காலக்ஷேபங்களும், பிரபல சாஸ்திர விற்பன்னர்களின் உபன்யாஸங்களும் நடைபெறும். வேத சாஸ்திர ஆகம சபைகள் நடைபெறும். விரிவான நிகழ்ச்சி விபரங்கள் தனியாகப் பிரசுரிக்கப்படும்.

குறிப்பு: 1. வெளியூர் அன்பர்களுக்கு இடவசதியுண்டு.
2. அதிஷ்டான அஸோஸியேஷன் ரசீது புஸ்தகங்கள் உள்ளவர்கள் வசூலிக்க அனுமதியுள்ளவர்கள்.
3. ஆராதனைக்கு நன்கொடையளிக்க விரும்புகிறவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.
4. ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் ஜீவிய சரித்திரம் கீழ்க்கண்ட விலாசத்தில் கிடைக்கும்.

**ஸ்ரீ E. S. சிவராமகிருஷ்ணன், ஸ்ரீ சேஷாத்ரி நிலயம், தாதாபாத், 6ம் வீதி, கோவை-12**

ஊஞ்சலூர்
3 - 10 - 70

இப்படிக்கு
ஸ்ரீ E. S. சிவராமகிருஷ்ணன், தலைவர்.
ஸ்ரீ K. V. சுப்பரத்னமய்யர், உபதலைவர்
ஸ்ரீ S. L. வெங்கிட்ராமய்யர், காரியதரிசி

### ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அதிஷ்டானம் அஸோஸியேஷன்
### (பதிவானது) ஊஞ்சலூர் S. R. (ஈரோடு வழி)



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

## "விபத்து வருகிறது!"

பழுவேட்டரையர் சிரித்தார். நந்தினியின் வார்த்தையைக் கேட்டுப் பரிகாசமாகச் சிரிப்பதாய் எண்ணிக் கொண்டு இலேசாகத்தான் சிரித்தார். அந்தச் சிரிப்பின் ஒலியினால் அந்த அறையும் அதிலிருந்த சகல பொருள்களும் நடு நடுங்கின.

தம்மை அவமதித்தவர்களை நந்தினி தன் கையினாலேயே கத்தி எடுத்துக் கொன்று விடுவதாகக் கூறியதைக் கேட்டபோது அவருடைய உள்ளத்தில் ஒரு பெருமிதம் உண்டாயிற்று. தம்முடைய மரியாதையைப் பாதுகாப்பதில் நந்தினிக்கு அவ்வளவு அக்கறை இருக்கிறது என்பதை அறிந்ததில் பழுவேட்டரையருக்கு இறும்பூது ஏற்பட்டது. அதே தோரணையில் அவள் மேலும் பேசிக் கேட்க வேண்டுமென்ற ஆசை அவர் மனத்தில் ஒரு பக்கம் பெருகியது. மற்றொரு பக்கத்தில் அவள் அம்மாதிரியெல்லாம் பேசுவதைத் தாம் விரும்பவில்லை என்று காட்டிக் கொள்ளவும் ஆசைப்பட்டார்.

"ஐயா! ஏன் சிரிக்கிறீர்கள்! என் வார்த்தையில் அவநம்பிக்கையினால் சிரிக்கிறீர்களா?" என்று நந்தினி கேட்டாள்.

"தேவி! மந்தார மலரின் இதழைப் போல் மென்மையான உன் கையினால் கத்தியை எப்படி எடுப்பாய் என்று எண்ணிச் சிரித்தேன். மேலும் நான் ஒருவன் இரண்டு நீண்ட கைகளை வைத்துக் கொண்டு உயிரோடிருக்கும்போது...."

"ஐயா! தங்கள் கரங்களின் பெருமையையும் வலிமையையும் நான் அறிவேன். யானைத் துதிக்கையையொத்த நீண்ட கைகள். இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போன்ற வலிமையுள்ள கைகள். போர்க்களத்தில் ஆயிரமாயிரம் பகைவர்களை வெட்டி வீழ்த்திய கைகள். சோழ சக்கரவர்த்திகளின் சிரத்தில் மணி மகுடத்தை வைத்து நிலைநாட்டி வரும் கைகள். ஆனாலும் அதையெல்லாம் இன்று நினைத்துப் பார்ப்பாரில்லை. நேற்றுப் பிறந்த பிள்ளைகள் தங்களை, 'கிழடு' என்று சொல்லி ஏளனம் செய்யும் காலம் வந்து விட்டது. தாங்களோ மந்திரத்தால் கட்டுண்ட சர்ப்பராஜனைப் போல் சோழ குலத்தாரிடம் கொண்ட பக்திக்குக் கட்டுப்பட்டுச் சும்மா இருக்க வேண்டியிருக்கிறது. என்னுடைய கரங்கள் வளையல் அணிந்த மென்மையான கரங்கள்தான். மலர் எடுத்து மாலை கட்டுவதற்கு மட்டுமே தகுதியுள்ள கைகள்தான். ஆனாலும் வீராதி வீரராகிய தங்களை அக்கினி சாட்சியாகக் கைப்பிடித்த காரணத்தினால் எனது கைகளுக்கும் சிறிது சக்தி ஏற்பட்டிருக்கிறது. என் கற்பைக் காத்துக் கொள்வதற்கும் என் கணவரின் மரியாதையை நிலைநிறுத்துவதற்கும் அவசியம் ஏற்படுமானால் என் கைகளுக்கும் கத்தி எடுக்கும் வலிமை உண்டாகி விடும். இதோ பாருங்கள்...!" என்று நந்தினி கூறிவிட்டு, மஞ்சத்துக்கு அடியிலிருந்த பெட்டியை வெளிப்புறமாக நகர்த்தினாள். பெட்டியைத் திறந்து அதன் மேற்புறத்தில் கிடந்த ஆடைகளை அப்புறப்படுத்தினாள். அடியில் தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்த நீண்ட வாளை ஒரு கையினால் அலட்சியமாக எடுத்துத் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்தாள்.

பழுவேட்டரையர் அதைப் பார்த்த வண்ணமாகச் சிறிது நேரம் பிரமித்துப் போய் நின்றார். பின்னர், ''இந்தப் பெட்டிக்குள்ளே இந்த வாள் எத்தனை காலமாக இருக்கிறது? உன் ஆடை ஆபரணங்களை வைத்திருப்பதாக அல்லவோ நினைத்தேன் ?'' என்றார்.

நந்தினி வாளைப் பெட்டியில் திரும்ப வைத்து விட்டு, ''ஆம்; என் ஆடை ஆபரணங்களை இந்தப் பெட்டியிலே தான் வைத்திருக்கிறேன். என் ஆபரணங்களுக்குள்ளே மிக முக்கியமான ஆபரணம் இந்த வாள். என் கற்பையும் என் கணவருடைய கௌரவத்தையும் பாதுகாப்பதற்குரியது'' என்றாள்.

''ஆனால் இதை நீ உபயோகப்படுத்துவதற்கு அவசியம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை; நான் ஒருவன் உயிரோடு இருக்கும் வரையில் !''

''அதனாலேதான் இந்த வாளை நான் வெளியில் எடுப்பதில்லை. ஈழ நாட்டிலிருந்து வேங்கி நாடு வரையில் சோழ சாம்ராஜ்யத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் தங்கள் தோள்வலிமை தங்கள் கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியாதா ? அல்லது பேதையாகிய என்னைத்தான் பாதுகாக்க முடியாதா ? என்றாலும், முக்கியமான ராஜரீக காரியங்களில் ஈடுபட்டிருக்கும் தாங்கள் எப்போதும் என்னைக் கட்டிக் காத்துக் கொண்டிருக்க முடியாது. தங்களைப் பிரிந்திருக்கும் நேரங்களில் என்னை நான் பாதுகாத்துக் கொள்ள ஆயத்தமாய் இருக்க வேண்டும் அல்லவா ?''

''தேவி! அதற்கு அவசியம் என்ன? போனது போகட்டும். இனி நான் உன்னைப் பிரிந்திருக்கப் போவதே யில்லை..''

''ஐயா ! என்னுடைய விருப்பமும் அதுதான். ஆனால் இந்த ஒரு தடவை மட்டும் தாங்கள் என்னைப் பிரிந்து தஞ்சைபுரிக்குப் போய் வாருங்கள்...''

''இது என்ன பிடிவாதம்? எதற்காக இந்தத் தடவை மட்டும் நான் உன்னை இங்கே விட்டு விட்டுப் போக வேண்டும்?''என்று பழுவேட்டரையர்கேட்டபோது அவருடைய புருவங்கள் நெரிந்தன.

''சுவாமி ! அதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன. என்னை நீங்கள் இப்போது தங்களுடன் அழைத்துப் போனால் இங்குள்ள மூடர்கள் மேலும் நம்மைக் குறித்துப் பரிகசித்துச் சிரிப்பார்கள். 'கிழவருக்கு இளைய ராணியிடம் அவ்வளவு நம்பிக்கை !' என்று சொல்லுவார்கள். அதை நினைத்தாலே எனக்கு இரத்தம் கொதிக்கிறது. மற்றொரு காரணம் இன்னும் முக்கியமானது. சம்புவரையரைத் தங்களுடைய அத்தியந்த சிநேகிதர் என்று இத்தனை காலமும் தாங்கள் சொல்லி வந்தீர்கள்; நம்பியும் வந்தீர்கள். ஆனால் இளவரசர் வந்ததிலிருந்து அவருடைய பேச்சிலும் நடவடிக்கைகளிலும் ஏற்பட்டிருக்கும் மாறுதலைக் கவனித்தீர்களா ? தாங்கள் கவனிக்காவிட்டாலும் நான் கவனித்துக் கொண்டு வருகிறேன்.....''

''நானும் அதைக் கவனித்துத்தான் வருகிறேன். அந்த மாறுதலுக்குக் காரணம் என்னவாயிருக்கும் என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறேன்....''



''தாங்கள் கபடமற்ற உள்ளமுடையவர் ; ஆகையால் ஆச்சரியப்படுகிறீர்கள். எனக்கு அதில் ஆச்சரியம் இல்லை. மனிதர்களுடைய பேராசை இயல்புதான் சம்புவரையரின் மாறுதலுக்குக் காரணம். இளவரசர் ஆதித்த கரிகாலர் பெண்களை முகமெடுத்தே பார்ப்பதில்லை யென்றும், கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லையென்றும் வதந்தியா யிருந்தது. இங்கு அவர் வந்ததிலிருந்து அதற்கு நேர்மாறாக நடந்து வருவதைப் பார்த்திருப்பீர்கள். பெண்கள் இருக்குமிடத்துக்கு அடிக்கடி வருகிறார். கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறார். இதற்கெல்லாம் காரணம் சம்புவரையர் மகள் மணிமேகலை மீது அவருடைய மனம் சென்றிருப்பதுதான். 'மணிமேகலையை வேட்டையாடுவதற்கு அழைத்துப் போகலாமா?' என்றுகூடக் கரிகாலர் கேட்டார் அல்லவா? இது சம்புவரையருக்கும் தெரிந்திருக்கிறது. ஆகையால் பழைய ஏற்பாடுகளையெல்லாம் அவர் மறந்து விட்டார். தம் அருமை மகள் தஞ்சாவூர்த் தங்கச் சிங்காதனத்தில் சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கப் போவது பற்றிக் கனவு காணத் தொடங்கி விட்டார்......''

''ஆமாம் ; நீ சொல்வதுதான் காரணமாயிருக்க வேண்டும். சம்புவரையன் இத்தகைய நீச குணம் படைத்தவன் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன்புதான் இதே மாளிகையில் மதுராந்தகரைத் தஞ்சைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைப்பதாக எல்லாரும் கூடிச் சபதம் செய்தோம். சிச்சி! இப்படிப் பேச்சுத் தவறுகிறவனும் ஒரு மனிதனா?'' என்று பழுவேட்டரையர் சீறினார்.

''சுவாமி! அதனாலேதான் நான் தங்களுடன் வரவில்லை என்று சொல்கிறேன். தாங்கள் இல்லாத சமயத்தில் இவர்கள் இங்கே என்ன சதி செய்கிறார்கள் என்பதைக் கவனித்துக் கொள்வேன். ஏதேனும் இவர்கள் சூழ்ச்சி செய்தால் அது பலிக்காமற் செய்ய வழி தேடுவேன்.''



''நந்தினி! இதிலேயெல்லாம் நீ எதற்காகப் பிரவேசிக்க வேண்டும்?''

''கணவர் சிரத்தை கொண்டுள்ள காரியத்தில் மனைவிக்கும் சிரத்தை இருக்க வேண்டாமா? 'வாழ்க்கைத் துணைவி' என்று பிறகு எதற்காக எங்களைச் சொல்கிறது?''

''என்ன இருந்தாலும் இந்த மூர்க்கர்களுக்கும் நீசர்களுக்கும் நடுவில் உன்னைத் துணையின்றி விட்டு விட்டு நான் போகிறதா? அது எனக்குச் சிறிதும் சம்மதமாயில்லையே?''

''எனக்கு இங்கே துணையில்லாமற் போகவில்லை. மணிமேகலை இருக்கிறாள். எனக்காக அந்தப் பெண் என்ன வேண்டுமானாலும் செய்வாள்.....''

''அது உண்மைதான். நானும் கவனித்தேன். உன்னுடைய மோகன சக்தி அவளை உன் அடிமையாக்கியிருக்கிறது. ஆனாலும் அது எவ்வளவு தூரம் நிலைத்திருக்கும்? ஆதித்த கரிகாலன் சிங்காதனத்தில் ஏறி அந்தப் பெண்ணைச் சக்கரவர்த்தினியாக்கிக் கொள்ளப் போவதாக ஆசை காட்டினால்....''

''ஐயா! அது விஷயத்தில் தங்களுக்குச் சிறிதும் சந்தேகம் வேண்டியதில்லை. மணிமேகலை என் கருத்துக்கு மாறாகத் தேவலோகத்து இந்திராணி பதவியையும் ஏற்றுக் கொள்ள மாட்டாள். 'கரிகாலனை இந்தக் கத்தியால் குத்திக் கொன்று விட்டு வா!' என்று நான் சொன்னால், உடனே அவ்விதம் செய்து விட்டு வருவாள். என்னுடைய மோகன சக்தியைப் பற்றி அடிக்கடி தாங்களே சொல்வீர்கள் அல்லவா? அது மணிமேகலையை முழுதும் ஆட்கொண்டிருக்கிறது! வேணுமானால், இப்போதே தங்களுக்கு அதை நிரூபித்துக் காட்டுகிறேன்!'' என்றாள் நந்தினி.

பழுவேட்டரையரின் உடம்பு படபடத்தது. அந்தக் கிழவர் உதடுகள் துடிக்க, தொண்டை அடைக்க, நாத் தழுதழுக்கக் கூறினார்: ''தேவி! உன்னுடைய சக்தியை நான் அறிவேன். ஆனால் கரிகாலன் விஷயத்தில் நீ அம்மாதிரி எதுவும் பரீட்சை பார்க்க வேண்டாம். அவன் அறியாச் சிறுவன். ஏதோ தெரியாமல் உளறினான் என்பதை நாம் பெரிதுபடுத்தக் கூடாது. கரிகாலன் மணிமேகலையை மணந்து கொள்ள இஷ்டப்பட்டால் நாம் அதற்குத் தடையாக இருக்க வேண்டாம்!''

''ஐயா! நாம் தடை செய்யாமல் இருக்கலாம். ஆனால் விதி ஒன்று இருக்கிறதே! அதை யார் தடை செய்ய முடியும்? மணிமேகலை என்னிடம் பிரியங் கொண்டவளாயிருப்பது போல் நானும் அவளிடம் பாசம் வைத்திருக்கிறேன். என் கூடப் பிறந்த தங்கையைப் போல் அவளிடம் ஆசை கொண்டிருக்கிறேன். அற்பாயுளில் சாகப் போகிறவனுக்கு அவளை மணம் செய்து கொடுக்க நான் எப்படி இணங்குவேன்?'' என்றாள் நந்தினி. அப்போது அவளுடைய பார்வை எங்கோ தூரத்தில் நடக்கும் எதையோ பார்த்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

பழுவேட்டரையர் இன்னும் அதிக பரபரப்பை அடைந்து கூறினார்: ''நந்தினி! இது என்ன வார்த்தை? சோழ சக்கரவர்த்தியின் வேளக்காரப் படைக்கு நான் ஒரு சமயம் தலைவனாயிருந்தேன். சக்கரவர்த்தியையும் அவருடைய சந்ததிகளையும் உயிரைக் கொடுத்தேனும் பாதுகாப்பதாகச் சத்தியம் செய்திருக்கிறேன்....''

''ஐயா! அந்தச் சத்தியத்தைத் தாங்கள் மீற வேண்டுமென்று நான் சொல்லவில்லையே?''

''உன்னால் கரிகாலனுக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்தாலும் அந்தக் குற்றம் என்னையே சாரும். சிறு பிள்ளையின் பரிகாசப் பேச்சைப் பொறுக்காமல் கிழவன் படுபாதகம் செய்து விட்டான் என்று உலகம் என்னை நிந்திக்கும். ஆறு தலைமுறையாக எங்கள் குலம் சோழர்களுக்குப் பாதுகாப்பாக இருந்து எடுத்திருக்கும் நல்ல பெயர் நாசமாகும்....''

''அப்படியானால் தாங்கள் இந்த ஊரை விட்டு உடனே போக வேண்டியது மிகவும் அவசியம்!'' என்று நந்தினி மர்மம் நிறைந்த குரலில் கூறினாள்.

''எதனால் அவ்விதம் சொல்லுகிறாய்?'' என்று பழுவேட்டரையர் கேட்டார்.

''தங்களிடம் எப்படிச் சொல்வதென்று தயங்கிக் கொண்டிருந்தேன். இப்போது சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. துர்க்கா பரமேசுவரி எனக்குச் சில அபூர்வ சக்திகளை அளித்திருக்கிறாள். இது தங்களுக்கே தெரியும். சுந்தர சோழர் இளம் வயதில் ஸ்திரீஹத்தி தோஷத்துக்கு உள்ளானவர் என்பதை நான் என் மந்திர சக்தியினால் அறிந்தேன். அதைத் தங்களுக்கும் நிரூபித்துக் காட்டினேன். அதே போல் ஆதித்த கரிகாலனுடைய இறுதிக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதையும் இப்போது என் அகக் கண்ணினால் காண்கிறேன். அது தங்கள் கையினாலும் நேரப் போவதில்லை; என் கையினாலும் நேரப்போவதில்லை; ஆனால் யமனுடைய பாசக் கயிறு அவனை நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பது மட்டும் நிச்சயம். காட்

டிலே வேட்டையாடப் போகும் இடத்திலே அவனுக்கு இறுதி நேரலாம்; அல்லது அரண்மனையில் படுத்திருக்கும் போதும் நேரலாம். புலி, கரடி முதலிய துஷ்ட மிருகங்களினால் நேரலாம்; அல்லது அவனுடைய சிநேகிதர்கள் விடும் அம்பு தவறி விழுந்தும் அவன் சாகலாம். அல்லது மென்மையான பெண்ணின் கரத்திலே பிடித்த கத்தியினால் குத்தப்பட்டும் அவனுக்கு மரணம் நேரலாம். ஆனால் ஐயா, அவனுடைய மரணம் தாங்கள் கைப்பிடித்து மணந்த என்னுடைய கரத்தினால் நேராது என்று தங்களுக்குச் சத்தியம் செய்து கொடுக்கிறேன். சாலையோரத்திலே அநாதையாக நின்ற என்னைத் தாங்கள் உலகறிய மணந்து இளைய ராணி ஆக்கினீர்கள். அத்தகைய தங்களுக்கு என்னால் ஒரு பழியும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வேன். அதற்காகவே தாங்கள் இச்சமயம் இங்கு இருக்க வேண்டாம்; போய்விடுங்கள் என்று வற்புறுத்திச் சொல்கிறேன். தாங்கள் இங்கு இருக்கும் சமயம் கரிகாலனுக்கு என்ன விதமான விபத்து நேர்ந்தாலும் உலகத்தார் தங்களை அத்துடன் சம்பந்தப்படுத்துவார்கள். அருள்மொழி வர்மனைக் கடல் கொண்டதற்குத் தங்கள் மீது பழி கூறவில்லையா? அம்மாதிரி இதற்கும் தங்கள் பேரில் குற்றம் சாட்டுவார்கள். தங்களால் விபத்து நேர்ந்தது என்று சொல்லாவிட்டாலும் தாங்கள் ஏன் அதைத் தடுக்கவில்லை என்று கேட்பார்கள். ஆனால் தங்களுடைய வஜ்ராயுதம் போன்ற கரங்களாலும் கரிகாலனுக்கு வரப்போகும் விபத்தைத் தடுக்க முடியாது. ஆகையால், தாங்கள் உடனே போய்விட வேண்டும். என்னைத் தங்களுடன் அழைத்துக் கொண்டு போனால் அதைப் பற்றியும் வீண் சந்தேகம் ஏற்படும். முன்னதாகத் தெரிந்திருந்தபடியினால் என்னையும் அழைத்துக் கொண்டுபோய் விட்டதாகச் சொல்லுவார்கள். ஆகையால் தாங்கள் மட்டுமே போக வேண்டும். என்ன நேர்ந்தாலும், எப்படி நேர்ந்தாலும், அதனால் தங்களுக்கு அபகீர்த்தி எதுவும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள நான் இங்கு இருப்பேன். ஐயா! என்னிடம் அவ்வளவு நம்பிக்கை தங்களுக்கு உண்டா?'' என்று நந்தினி கேட்டுவிட்டுத் தன் கரிய பெரிய விழிகளால் பழுவேட்டரையரின் நெஞ்சை ஊடுருவிப் பார்ப்பவள் போல் பார்த்தாள். பாவம்! அந்த வீரக்கிழவர் நந்தினியின் சொல்லம்பினால் பெரிதும் கலங்கிப் போயிருந்தார். அவளுடைய கண் அம்புக்கு முன்னால் கதி கலங்கிப் பணிந்தார்.

### நாற்பதாம் அத்தியாயம்

## நீர் விளையாட்டு

இந்த வரலாறு நிகழ்ந்த காலத்துக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் மூவேந்தர்களைத் தவிரச் சிற்றரசர்கள் எழுவர் புகழ் பெற்று விளங்கினார்கள். அவர்களுக்கு 'வள்ளல்கள்' என்ற பட்டப் பெயரும் வழங்கி வந்தது. அந்த எழுவரில் ஒருவன் கொல்லி மலையின் தலைவனான ஓரி என்பவன். இவன் வில் வித்தையில் இணையில்லாத வீரன் என்று பெயர் பெற்றிருந்தான். இவன் தன் வலிய பெரிய வில்லை வளைத்து நாணேற்றி அம்பை விட்டானாயின், அது இராமபிரானுடைய அம்பு ஏழு மரங்களைத் தொளைத்ததுபோல் முதலில் ஒரு புலியைத் தொளைத்து, பிறகு ஒரு மானைத் தொளைத்து, பிறகு ஒரு பன்றியைத் தொளைத்து, பின்னர் ஒரு முயலைத் தொளைத்து, கடைசியில் ஒரு மரத்தையும் தொளைத்து விடுமாம். இவ்வாறு புலவர்களால் அவனுடைய வில் வித்தைத் திறன் பாடப் பெற்றிருந்தது. அதிலிருந்து அவனை 'வல்வில் ஓரி' என்று குறிப்பிடுவதும் வழக்கமாயிற்று.

கொல்லிமலை வல்வில் ஓரியின் மீது, அந்நாளில் வலிமை பெற்ற வேந்தனாக விளங்கிய சேரன் கோபம் கொண்டான். அவனைத் தாக்குவதற்குத் திருக்கோவலூர்த் தலைவன் மலையமான் திருமுடிக் காரியின் துணையை நாடினான். காரியின் வீரம் ஓரியின் வீரத்துக்குக் குறைந்ததன்று. அத்துடன் மலையமான் காரிக்குப் படை பலம் அதிகமாயிருந்தது. மலையமான் கொல்லிமலை மீது படை எடுத்துச் சென்று வல்வில் ஓரியைக் கொன்று அவனுடைய மலைக் கோட்டையையும் நிர்மூலமாக்கினான்.

அதே காலத்தில் கொல்லி மலையை அடுத்திருந்த நிலப் பகுதியில் அதிகமான் நெடுமானஞ்சி என்னும் குறுநில மன்னன் அரசு புரிந்து வந்தான். வல்வில் ஓரியுடன் அவன் உறவு பூண்டவன். வல்வில் ஓரியைக் கொன்ற மலையமான் காரியை அவன் பழி வாங்க விரும்பினான். தன்னால் மட்டும் அது முடியாதென்று எண்ணிச் சோழ மன்னனாகிய கிள்ளி வளவனின் உதவியை நாடினான். மலைய





● வலது பக்கமுள்ள படத்தைப் பார்த்தால்
● நேரு என்று உடனே சொல்வீர்கள்.
● மேலே உள்ள படத்தைப்
● பார்த்தால் என்ன சொல்வீர்கள்?

(28-ம் பக்கம் பார்க்க)

மானின் வலிமை அதிகமாகி வருவது பற்றியும் அவன் சேரனோடு தோழமை கொண்டிருப்பது பற்றியும் கிள்ளி வளவனுக்குக் கோபம் இருந்தது. எனவே, சோழன் கிள்ளி வளவனும் தகடூர் அதிகமானும் சேர்ந்து திருக்கோவலூர் மலையமானைத் தாக்கினார்கள். மலையமான் போர்க்களத்தில் வீரசொர்க்கம் எய்தினான். மலையமானுடைய இரு இளம் புதல்வர்களைச் சோழ நாட்டு வீரர்கள் சிறைப்பிடித்து வந்தார்கள். மலையமானுடைய வம்சத்தையே அழித்துவிட வேண்டும் என்று கறுவி யிருந்த அதிகமானும் கிள்ளி வளவனும் அந்தக் குழந்தைகளைப் பூமியில் கழுத்தளவு புதைத்து யானைக் காலால் இடறிக் கொல்லும்படி கட்டளை யிட்டார்கள். மலையமானுடைய வள்ளன்மையை அறிந்து, அதனால் பயன் துய்த்திருந்த புலவர் ஒருவர் அச்சமயம் அங்கு வந்து சேர்ந்தார். மலையமானுடைய குழந்தைகளின் உயிருக்காகச் சோழ மன்னனிடம் மன்றாடினார்.

"வேந்தே! அதோ பார்! கழுத்து வரை புதைக்கப்பட்டிருக்கும் குழந்தைகளின் முகங்களைப் பார்! அந்த முகங்களில் தவழும் புன்னகையைப் பார்! தங்களைக் காலால் இடறிக் கொல்லப் போகிற யானையைப் பார்த்து, அதன் துதிக்கை ஆடுவதைப் பார்த்து அக்குழந்தைகள் ஏதோ வேடிக்கை என்று எண்ணிச் சிரிக்கின்றன! இத்தகைய குற்றமற்ற குழந்தைகளையா கொல்லப் போகிறாய்? அந்தக் குழந்தைகள் என்ன பாபம் செய்தன? தகப்பன் செய்த குற்றத்துக்காகக் குழந்தைகளைத் தண்டிக்கலாமா?" என்றார் புலவர்.

அதைக் கேட்ட சோழன் மன மாற்றம் அடைந்தான். தன் கட்டளையை உடனே மாற்றினான். குழந்தைகளைத் தரையிலிருந்து எடுக்கச் செய்தான். தன் அரண்மனையிலேயே வளர்க்கவும் செய்தான். வயது வந்த பிறகு அவர்களில் மூத்தபிள்ளைக்குத் திருக்கோவலூர் அரசையும் திரும்பக் கொடுத்தான்.

அது முதல் நூற்றாண்டு நூற்றாண்டாகச் சோழ குலத்து மன்னர்களிடம் திருக்கோவலூர் மலையமான் வம்சத்தினர் நன்றியுடன் நட்புரிமை கொண்டிருந்தார்கள். அந்த உறவு சுந்தர சோழர் காலம் வரையில் நீடித்திருந்தது. மலையமான் மகளாகிய வானமாதேவியைச் சுந்தர சோழர் மணந்து பட்டமகிஷியாகக் கொண்டார்.

கொல்லிமலை வல்வில் ஓரி — தகடூர் அதிகமான் இவர்களுடைய வம்சத்தினர் அழிந்து பட்டனர். ஆயினும் அவர்களுடைய கிளை வம்சத்தில் தாங்கள் தோன்றியதாகக் கடம்பூர் சம்புவரையர்கள் சொல்லிக் கொண்டார்கள். அவர்களுடைய முன்னோர்கள் திருக்கோவலூர் மலையமான் வம்சத்தாரிடம் கொண்டிருந்த பகைமையையும் சம்புவரையர்கள் மறக்கவில்லை. ஆதலின் மலையமானுடைய பேரப்பிள்ளை சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடிசூடுவதை அநேகர் விரும்பாதது இயற்கையே யல்லவா? ஆதித்த கரிகாலனுடைய அகம்பாவமும், சிற்றரசர்களைச் சிறிதும் மதியாமல் அவன் நடந்து கொண்ட விதமும் சம்புவரையர்களின் வெறுப்பு வளர்வதற்கு மேலும் காரணம் தந்தது. ஆகையினா

# பிரிட்டானியா க்ளுகோஸ்

## மில்க் பிஸ்கட்டுகள்

# இன்சுவைமிக்க சத்துணவு

BRITANNIA
GLUCOSE
MILK BISCUITS

BRITANNIA
GLUCOSE
MILK BISCUITS
BRITANNIA

GLUCOSE
BBC

இந்த பிஸ்கட்டுகளில்
சக்தி தரும் க்ளுகோஸும் பாலும்
நல்ல சுவை தரும் வகையில்
ஒன்று சேர்ந்துள்ளன. எந்த நேரமும்
உங்கள் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.
பிரிட்டானியா க்ளுகோஸ் மில்க் பிஸ்கட்டுகள்
ருசியுள்ளவை. நன்மை பயப்பவை.

பிரிட்டானியா என்றாலே உயர் தரம்

BBC 1317 R

உங்களுக்கு
ஜலதோஷம்
வரும்போலிருந்தால்
ரபெக்ஸ்
பாதுகாப்பளிக்கும்



# ரபெக்ஸ்

## ஜலதோஷத்திற்கு தீவிரமாகச் செயல்புரியும், எரிச்சலற்ற நிவாரணி

குளிரும், ஓதமும் நிறைந்த சீதோஷண நிலையில் பாதுகாப்பளிக்கிறது. உங்களுக்கு ஜலதோஷம் உள்ளபோது மார்பில் அடைசலை அகற்றி, மூக்கடைப்பைப் போக்கி, இதமான நிவாரணமளிக்கிறது.

* 65 கிராம் மற்றும் 20 கிராம் ஜாடிகளிலும். 6 கிராம் டின்களிலும் கிடைக்கிறது.
ரபெக்ஸ் எப்பொழுதும் கைவசம் இருக்கட்டும்.




அலெம்பிக்கின்
ஹோம்ப்ரோ
பிரிவின் தயாரிப்பு



ஜலதோஷத்திலிருந்து
நிவாரணமளிக்கிறது
ரபெக்ஸ்

everest/969i/ACW tm

லேயே கண்டராதித்தருடைய குமாரன் மதுராந்தகனைத் தஞ்சை சிம்மாதனத்தில் ஏற்றி வைக்கும் முயற்சியில் சம்புவரையர்கள் ஊக்கமாக ஈடுபட்டார்கள்.

ஆனால் கரிகாலன் கடம்பூருக்கு வந்த நாளிலிருந்து பெரிய சம்புவரையரின் உள்ளம் சிறிது சிறிதாக மாறுதல் அடையலாயிற்று. அவருடைய செல்வப் புதல்வியாகிய மணிமேகலையே அவருடைய மனமாறுதலுக்குக் காரணமாயிருந்தாள். ஆதித்த கரிகாலனுடைய உள்ளத்தை மணிமேகலை கவர்ந்து விட்டாள் என்பதற்குப் பல அறிகுறிகள் தென்பட்டன. பெண்களைக் கண்ணெடுத்தும் பாராதவன் என்றும், பிரம்மச்சாரியாகவே காலத்தைக் கழிக்கப் போகிறான் என்றும் கரிகாலனைப் பற்றிப் பேசப்பட்டு வந்தது. அத்தகையவன் கடம்பூர் மாளிகைக்கு வந்ததிலிருந்து அடிக்கடி பெண்கள் இருக்கும் இடம் போவதும் அவர்களுடன் உல்லாசமாகப் பேசுவதுமாக இருந்தான். முக்கியமாக அவன் மணிமேகலையின் 'சூடிகை'யைப் பற்றி அடிக்கடி பாராட்டிப் பேசினான். கரிகாலன் வந்ததிலிருந்து மணிமேகலையும் ஒரே உற்சாகமாக இருந்தாள். அதற்குக் காரணம் அவளும் கரிகாலனிடம் பற்றுக் கொண்டதுதான் என்று பெரிய சம்புவரையர் கருதினார். அவர்கள் இருவருடைய குதூகலத்தையும் பார்த்துப் பார்த்துச் சம்புவரையரும் உற்சாகம் கொண்டார். கரிகாலன் மணிமேகலையை மணந்து கொண்டால், தம் செல்வத் திருமகள் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாக விளங்குவாள்! அவளுக்குப் பிறக்கும் குழந்தையும் தஞ்சை சிங்காதனத்துக்கு உரியவனாவான்! இன்று திருக்கோவலூர் மலையமான் அடைந்திருக்கும் பெருமிதத்தை அப்போது தாமும் அடையலாம். அதற்கெல்லாம் தாமே எதற்காகத் தடையாக இருக்க வேண்டும்? தமது அருமைக் குமாரியின் ஏற்றத்துக்குத் தாமே ஏன் இடையூறு செய்ய வேண்டும்?

மதுராந்தகனுக்குத் தம் மகளையும் மணம் செய்விக்கலாம் என்ற யோசனை முன்னம் சம்புவரையருக்கு இருந்தது உண்மைதான். ஆனால் மதுராந்தகனுக்கு ஏற்கனவே இரு மனைவியர் இருந்தனர். சின்னப் பழுவேட்டரையரின் மகளை அவன் மணந்திருந்ததுடன், அவளுக்கு ஓர் ஆண் மகவும் பிறந்திருந்தது. ஆகையால் மதுராந்தகன் சிங்காதனம் ஏறினும் பழுவேட்டரையரின் வம்சத்தினர்தான் பட்டத்துக்கு உரிமை பெறுவார்கள். மணிமேகலை தஞ்சை அரண்மனையில் உள்ள பல சேடிப் பெண்களில் தானும் ஒருத்தியாக வாழ வேண்டியிருக்கும்.

ஆனால் ஆதித்த கரிகாலனை மணிமேகலை மணம் செய்து கொண்டால் அவள்தான் பட்டமகிஷியாயிருப்பாள். அவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கே சிங்காதனம் உரியதாகும்.

மதுராந்தகனுக்குப் பட்டம் சூட்டுவதென்பது பிரம்மப் பிரயத்தனமான காரியம். மக்கள் அதற்கு விரோதமாயிருப்பார்கள். மலையமானுடனும் கொடும்பாளூர் வேளானுடனும் போராட்டம் நடத்தித்தான் அதைச் சாதிக்க வேண்டியதாயிருக்கும். மதுராந்தகனுடைய அன்னையே அதற்குத் தடையாக இருக்கிறாள். இவ்வளவு தொல்லையான முயற்சியை எதற்காக மேற்கொள்ள வேண்டும்?

ஆதித்த கரிகாலனுக்கு முடி சூட்டுவதென்பது ஏற்கெனவே





முக்கியமான காரியம். அதை நிறைவேற்றுவதில் எவ்வித சிரமமும் ஏற்படாது. பழுவேட்டரையர்களின் பிடிவாதம்தான் பெரிய இடையூறாயிருக்கும். அவர்களில் பெரிய கிழவனோ இளைய ராணியின் மோகத்தில் மூழ்கிக் கிடக்கிறான். இன்னும் எத்தனை நாளைக்கு அவன் உயிரோடிருப்பானோ, தெரியாது. அந்தக் கிழவனை நம்பி ஒரு பெரும் அபாயகரமான காரியத்தில் எதற்காகத் தலையிட வேண்டும்?

மதுராந்தகன் பக்கம் இருப்பதாகத் தாம் சபதம் செய்து கொடுத்திருப்பது என்னமோ, உண்மைதான். அதனால் என்ன? சபதத்துக்குப் பங்கம் செய்யாமலே காரியத்தை முடிக்க வழி இல்லாமலா போகிறது? மதுராந்தகன் ஓர் அப்பாவிப் பிள்ளை என்பது தெரிந்த விஷயம்தான். அவனைக் கொண்டே "எனக்கு ராஜ்யம் வேண்டாம்" என்று கூடச் சொல்லும்படி செய்துவிடலாம். அல்லது அவனுடைய அன்னையின் சம்மதம் வேண்டும் என்று வற்புறுத்தினாலும் போதுமே!...

இவ்வாறெல்லாம் சம்புவரையரின் உள்ளம் சிந்திக்கத் தொடங்கியிருந்தது. ஆகையால் பழுவேட்டரையர் தஞ்சைக்குப் போகும் யோசனையை அவர் உற்சாகமாக ஆதரித்தார். அவர் இல்லாத சமயத்தில் கரிகாலனுடன் அந்தரங்கமாகப் பேசி அவனுடைய உள்ளத்தை நன்கு அறிந்து கொள்ளலாம் என்றும், பிறகு சமயோசிதம் போல் நடந்து கொள்ளலாம் என்றும் எண்ணினார். ஆதலின் பெரிய பழுவேட்டரையரை அவரே துரிதப்படுத்திப் பரிவாரங்களுடன் தஞ்சைக்கு அனுப்பி வைத்தார்.

பழுவேட்டரையர் பிரயாணப்பட்டுச் சென்ற பிறகு ஆதித்த கரிகாலனும் அவனுடைய தோழர்களும் வேட்டைக்குப் புறப்பட்டார்கள். அவர்களுடனே மணிமேகலையையும் மற்ற அந்தப்புரப் பெண்களையும் அனுப்பக்கூடச் சம்புவரையர் சித்தமாயிருந்தார். ஆனால் நடப்பதையெல்லாம் வேறு நோக்குடன் கவனித்து வந்த கந்தமாறன் அதை ஆட்சேபித்தான். கரிகாலன் மணிமேகலையிடம் காட்டிய சிரத்தையெல்லாம் நந்தினியை முன்னிட்டுத்தான் என்பதை அவன் உணர்ந்திருந்தான். இதனால் கரிகாலன் பேரில் அவனுடைய வெறுப்பு வளர்ந்திருந்தது. இதையெல்லாம் தந்தையிடம் விளக்கிச் சொல்லவும் முடியவில்லை. ஆகையால்,

"வேட்டையாடும் இடத்தில் பெண்களைக் கூட்டிக் கொண்டு போய் என்னத்தைச் செய்வது? இவர்கள் பத்திரமாயிருக்கிறார்களா என்று பார்ப்பதற்குத்தான் சரியாயிருக்கும். மேலும் இது ஐப்பசி மாதம். எந்த நிமிஷத்திலும் பெரு மழை தொடங்கலாம். ஏரிக்கரைக் காடெல்லாம் வெள்ளமாகிவிடும். பெண்கள் திண்டாடிப் போவார்கள்!" என்று சொன்னான்.

அதன்பேரில் சம்புவரையரும் அந்த யோசனையைக் கை விட்டு விட்டார். ஆதித்த கரிகாலன் தன் தோழர்களாகிய பார்த்திபேந்திரன், வந்தியத்தேவன், கந்தமாறன் இவர்களையும் மற்ற வேட்டைக்காரர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றான்.

* * *

எல்லாரும் சென்ற பிறகு சம்புவரையர் மாளிகை வெறிச்சென்று இருந்தது. நந்தினி மணிமேகலையைப்பார்த்து "புருஷர்கள் வீட்டிலிருக்கும்போது நமக்குத் தொல்லையாகத் தோன்றுகிறார்கள். ஆனால் அவர்கள் எங்கேயாவது போய் விட்டாலும் நமக்குச் சங்கடமாகத்தான் இருக்கிறது. பரிகசித்துச் சிரிப்பதற்குக் கூட விஷயம் கிடைப்பதில்லை!" என்றாள்.

"ஆம், அக்கா! நாம்கூட வேட்டைக்குப் போயிருக்கலாம். எனக்கு வேட்டையைப் பார்க்கப் பிரியம் அதிகம். என் தந்தையோடும், தமையனோடும் சில சமயம் போவதுண்டு. ஆனால் இன்றைக்கு என்னமோ கந்தமாறன் பிடிவாதமாகத் தடை செய்து விட்டான். ஒருவேளை உங்களுக்கு வேட்டை பிடிக்காது என்று அவ்விதம் தடை செய்தானோ, என்னமோ?" என்றாள் மணிமேகலை.

"ஆமாம்; எனக்கு வேட்டை அவ்வளவாகப் பிடிப்பதில்லைதான். இரத்தத்தைக் கண்டாலே எனக்குத் திகிலாயிருக்கும். ஆனால் கந்தமாறன் அதற்காகச் சொல்லவில்லையடி! உன்னையும் உன் வீட்டு விருந்தாளிகளில் ஒருவரையும் பிரித்து வைப்பதற்காகவே அவ்விதம் அவன் தடை செய்துவிட்டான்!" என்றாள் நந்தினி.

மணிமேகலையின் கன்னங்களில் குழிகள் காணப்பட்டன. சிறிது நேரம் தரையைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "புருஷர்கள் எங்கேயாவது போய்த் தொலையட்டும் அக்கா! அவர்கள் சகவாசமே நமக்கு வேண்

புதுமை!

ஸிந்தெல் வானிஷிங் கிரீம் தருகின்ற சீதனம்

செழித்து சிரிக்கின்ற ரோஜாவின் மலர்வதனம்




கோத்ரேஜின் புதிய வானிஷிங் கிரீம் ஸிந்தெல், உங்கள் வதனத்திற்கு புத்தம்புது ரோஜா மலரின் மெருகேற்றி, எழிலோங்கச் செய்கிறது. சருமத்தில் போட்டதே தெரியாமல் கரைந்து மறைந்து, பட்டுப் போன்ற பளபளப்பை மட்டும் ஒளிவிடச் செய்கிறது ஸிந்தெல்.

ஸிந்தெல், சருமத்தின் இயற்கையான ஈரத்தன்மையை நிலை நிறுத்தி, நாள் முழுவதும் நலியாத புதுமைச் சிலிர்ப்பினை அளிக்கிறது. அழகுப் படிமானமாகவோ, அப்படியேவோ உபயோகிக்கும்போது, **ஸிந்தெல்** தரும் தூய ரோஜா சுகந்தம் உங்களைக் கவர்ச்சிக் கன்னியாகக் கனியவைக்கிறது.

**கொஞ்சிடும் அழகு மிஞ்சிட—ஸிந்தெல்**
**கோத்ரேஜின் புதிய வானிஷிங் கிரீம்.**

Godrej

ULKA-GSC-2 TAM

டாம். நாம் ஏரிக்கரை நீராழி மண்டபத்துக்குப் போய் நீர் விளையாட்டு விளையாடிவிட்டு வரலாம்! வருகிறீர்களா?'' என்றாள். நந்தினியும் அதற்குச் சம்மதிக்கவே தந்தையிடம் சொல்லி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை மணிமேகலை செய்தாள்.

* * *

வீரநாராயண ஏரியின் கீழ்ப்புறத்தில் பெரிய கரையும் அதன் எழுபத்தி நாலு மடவாய்களும் உண்டு என்பதைப் பார்த்திருக்கிறோம் அல்லவா? ஏரியின் மேற்புறத்தில் அத்தகைய பெரிய கரை கிடையாது. ஏரி நீரின் ஆழம் சிறிது சிறிதாகக் குறைந்து வந்து ஏரிக் கரை அங்கே சமதரையாக அமைந்திருந்தது. இன்னும் மேற்கே அடர்ந்த காடுகள் மண்டிக் கிடந்தன

இவ்விதம் ஏரி நீர் குறைந்து சமதரையாகும் பிரதேசத்தில், ஆங்காங்கே சிறிய சிறிய தீவுகள் காணப்பட்டன. தீவுகளில் மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்து வளர்ந்திருந்தன. அத்தீவுகளில் ஒன்றின் கரையில் படித்துறையும் நீராழி மண்டபமும் அமைக்கப்பட்டிருந்தன. இங்கே கடம்பூர் சம்புவரையர் மாளிகையின் அந்தப்புரத்துப் பெண்கள் நீராடுவதற்காகவும் உல்லாசமாகப் பொழுது போக்குவதற்காகவும் வருவது வழக்கம். அந்த இடத்துக்கு வந்து சேரவேண்டுமானால் இரண்டு காத தூரம் ஏரியைச் சுற்றிக் கொண்டு வரவேண்டும். அல்லது படகிலேறி ஏரியைக் கடந்து வரவேண்டும். இதனாலும் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் குளிக்கும் இடம் என்று தெரிந்திருந்தபடியாலும் அன்னிய மனிதர்கள் அங்கே வருவது கிடையாது.

நந்தினியும் மணிமேகலையும் படகிலேறிக் கொண்டு அந்தத் தீவுக்கு இப்போது வந்து சேர்ந்தார்கள். படகு ஓட்டத் தெரிந்த இரண்டு தோழிமார்கள் உடன் வந்தார்கள். சமையல் செய்வதற்கு வேண்டிய பண்டங்களையும் படகில் கொண்டு வந்தார்கள். நீராழி மண்டபப் படித்துறையை அடைந்ததும் தோழிப் பெண்கள் படகை விட்டு இறங்கி மண்டபத்தில் சமையல் செய்யத் தொடங்கினார்கள்.

நந்தினியும் மணிமேகலையும் சிறிது நேரம் படித்துறையில் உட்கார்ந்து வம்பு பேசிக்கொண்டிருந்தார்கள். மணிமேகலை இயற்கை மதியூகமுள்ள பெண்; குறும்பில் பற்றுள்ளவள். அவள் பழுவேட்டரையர் பேசுவது போலவும், கரிகாலன், கந்தமாறன், பார்த்திபேந்திரன், வந்தியத்தேவன் ஆகியவர்கள் பேசுவது போலவும் பேசி நடித்துக் காட்டினாள். அதையெல்லாம் பார்த்தும் கேட்டும் நந்தினி கலீர் கலீர் என்று சிரித்துக்கொண்டிருந்தாள். ஆயினும் அவளுடைய கவனம் முழுவதும் மணிமேகலையிடம் இல்லை என்பதும், அவள் மனம் அவ்வப்போது ஏதோ அந்தரங்க சிந்தனையில் ஈடுபட்டது என்பதும் வெளியாகி வந்தது.

திடீரென்று மணிமேகலை துள்ளிக் குதித்து எழுந்து நின்றாள். ''அக்கா! வேட்டைக்கு நாம் போகவில்லை; ஆனால் வேட்டை நம்மைத் தேடி வந்திருக்கிறது!'' என்று கூவிக் கொண்டே இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்தாள்.

நந்தினியும் திடுக்கிட்டு எழுந்து மணிமேகலை பார்த்த திசையை நோக்கினாள். அங்கே சாய்ந்து படர்ந்திருந்த ஒரு பெரிய மரக் கிளையின் மீது சிறுத்தைப் புலி ஒன்று காணப்பட்டது. அந்தச் சிறுத்தை அவர்கள் மீது பாயலாமா வேண்டாமா என்று யோசிப்பதுபோலப் பார்த்துக் கொண்டிருந்தது.

அதே சமயத்தில் சிறிது தூரத்தில் குதிரைகள் தண்ணீரில் இறங்கிப் பாய்ந்து வரும் சத்தமும் கேட்டது.

(தொடரும்)

அது நிலாப் பட்டண ஓவியம் என்கிறார் திரு பி. எஸ். சர்மா. இம்மாதம் 22ந் தேதி முதல் 28ந் தேதி வரை ஒரு வார காலம் புது தில்லி விஞ்ஞான பவனில் சர்வதேச விமான இணைப்புகளின் 63வது ஆண்டு மகாநாடு நடைபெறுகிறது.



அப்போது ரஷ்ய-அமெரிக்க விண்வெளி வீரர்களுக்குப் பாராட்டும் பதக்கமும் வழங்கப் படுகின்றன. இந்நிகழ்ச்சிகளையொட்டி சர்மாவின் ஓவியக் கலைக்காட்சிக்கும் ஏற்பாடாகி யிருக்கிறது.

தகவல்: ஏ. ஆர். ராஜாமணி

# ராமாயணம்

## — ராஜாஜி —

சீதை மோதிரத்தை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு, ஆனந்த பரவசமானாள். இது ஒரு ராவண மோசமோ, அரக்கர் மாயமோ என்கிற பீதி முற்றிலும் ஒழிந்து, ஹனுமானிடம் பரிபூரண நம்பிக்கையும் அளவு கடந்த பிரியமும் அடைந்தாள்.

"அப்பனே! நான் எப்படிப்பட்ட தவறு செய்தேன்! உன்னையா சந்தேகித்தேன்!" என்று தன்னை நொந்து கொண்டாள்.

வாயு புத்திரனான ஹனுமான், தான் யார் என்பதையும் தன் பிறப்பைப் பற்றியும் எடுத்துச் சொன்னான். "வாயு பகவானுடைய அனுக்கிரகம் பெற்ற நான், என் சாமர்த்தியத்தை நானே சொல்லிக் கொள்ளக் கூடாதாயினும் உம்முடைய துக்கத்தைத் தீர்ப்பது அவசியம். அதற்காகச் சொன்னேன். வானர வீரர்களும் படையும் வந்து அரக்கனையும் அவன் ராஜ்யத்தையும் வெகு சீக்கிரத்தில் நிர்மூலம் செய்து விடப்போகிறார்கள். நான் திரும்பிப் போய் விஷயத்தைச் சொல்ல வேண்டியதுதான் தாமதம்" என்று சொல்லி, தேவியின் பிரிவால் ராமன் படும் துக்கத்தையும், அவன் விரத வாழ்க்கையைப் பற்றியும் ஜானகியின் மனம் உருகும்படி எடுத்துச் சொன்னான்.

சீதை தன் துக்கத்தையும் மறந்து ராமனுடைய துயரத்தைப் பற்றி வருந்தலானாள்.

## 70. பிராட்டியும் மாருதியும்

"அன்புக்குரிய வானர சிரேஷ்டனே! நீ கொண்டு வந்த செய்தியைக் கேட்டு நான் மகிழ்வதா துக்கப்படுவதா என்பது தெரியவில்லை. உன் மொழியெல்லாம் அமிருதம் கலந்த விஷம் போல் என் உள்ளத்தில் பாய்கிறது. அவர் என்னை மறந்து விடவில்லை, என்னைத் தேடுகிறார் என்பது ஆனந்தம் தருகிறது. துக்கப்படுகிறார், என்னையே நினைத்து நினைத்துத் துயரப்படுகிறார் என்பது என்னுடைய துக்கத்தை அதிகப்படுத்துகிறது."

இவ்வாறு ஜானகி உள்ளதை உள்ளது போல் சொல்லி ஆறுதல் அடைந்தாள்.

மனித வாழ்க்கையில் சுகமும் துக்கமும், சந்தோஷமும் துயரமும் ஒன்றோடு ஒன்று கலந்து மக்களை இயக்குகின்றன. ராமன் தன்னை மறக்கவில்லை, தன்னையே நினைத்து நினைத்து வாடித் துயரப்பட்டு வருகிறார், தேடித் தேடி அலைந்து துக்கப்பட்டு வருகிறார் என்கிற செய்தி சீதைக்கு மிக்க ஆறுதலும் சந்தோஷமும் தந்தது. ஆனால் கூடவே துயரமும் தந்தது.

சீதை சொன்னாள்: "மனித ஜன்மத்தில் சந்தோஷம், விசனம் என்கிற இரட்டைக் கயிற்றால் உயிரானது கட்டி இழுக்கப்படுகிறது. இதை யாரும் தப்ப முடியாது. ராமனும், லக்ஷ்மணனும், நானும் இந்த இயற்கை விதிக்கு உட்பட்டிருக்கிறோம். பெரும் சுழிக் காற்றில் அகப்பட்டுக் கடலில் தள்ளாடும் படகைப் போல என் பிராணநாதன் துக்கப்படுகிறார். அவர் எப்போது வருவார்? அன்புக்குரிய வானர சிரேஷ்டனே, இந்த லங்கையையும் ராவணனையும் மற்ற அரக்கர்களையும் எப்போது வந்து வதம் செய்வார்? இந்த ராக்ஷஸன் எனக்கு வைத்திருக்கும் கால வரையறைக்குள் இது நடக்க வேண்டுமே? இதை என் நாதனிடம் சொல்லுவாய். இரண்டு மாதங்கள்தான் மிஞ்சி நிற்கின்றன. ராவணனை நல்வழியில் செலுத்த அவன் தம்பி விபீஷணன் எவ்வளவோ முயன்றான். 'சீதையைக் கொண்டு போய்த் திருப்பி ஒப்படைத்துவிடு. லங்கையும் ராட்சஸ குலமும் தப்பிப் பிழைக்கும்' என்று விபீஷணன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். எல்லாம் பயனில்லாமல் போயிற்று. என் உள்ளத்தில் அந்தராத்மா தைரியமாக இருக்கிறது. ராவணன் அழியும் காலம் நெருங்கி வருகிறது. யமனை அவனே தேடுகிறான். அவன் அழிவது நிச்சயம். நாதன் வந்து என்னைச் சீக்கிரமே வெற்றியுடன் அடையப் போகிறார். இதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை. பாவத்தை அறியாத என் உள்ளத்தில் காணும் நிகழ்ச்சி ஒரு நாளும் பொய்யாகாது."

இவ்வாறு சீதை கண்களில் நீர் ததும்பப் பேசிக் கொண்டே போனாள். சீதையின் துக்கத்தைப் பார்த்து ஹனுமானுக்குப் பொறுக்க முடியவில்லை.

''ஜானகி, தாயே! உடனே போய்ச் சொல்லி ராகவனை அழைத்து வருவேன். பெருஞ் சேனைகளுடன் வந்து லங்கையில் இறங்குவான். கவலைப்படாதீர். உமக்கு இஷ்டமாயின் சொல்வீர். இப்போதே என் முதுகில் ஏறி உட்காருவீர். நானே உம்மைத் தூக்கிக் கடலைத் தாண்டிப் போய் ராமனிடம் சேர்த்து விடுவேன். இதைச் செய்வதற்குப் போதிய பலம் எனக்கு இருக்கிறது. சந்தேகம் இல்லை. அக்கினித் தேவன் இந்திரனிடம் அவியைக் கொண்டு போய்ச் சேர்ப்பதைப் போல் ராமசந்திரனிடம் உம்மைக் கொண்டு போய்ச் சேர்ப்பேன். புண்ணியவதியே! உத்தரவிடுவீர். இன்றே ராகவனை நீர் பார்க்கலாம். தம்பியிடம் உட்கார்ந்திருக்கும் ராமசந்திரனிடம் இன்றே நீர் போய்ச் சேருவீர். சந்தேகம் வேண்டாம். ராவணனோடு லங்கை முழுவதையும் தூக்கி ராமன் காலடியில் கொண்டு போய்ச் சேர்ப்பேன். இதுவும் என்னால் முடியும். என்னை யாரும் தடுக்க முடியாது. என் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்திரானால் நீரே பார்ப்பீர். ரோஹிணி நட்சத்திரம் சந்திரனிடம் சேருவது போல் ராமசந்திரனைச் சந்தோஷமாக நீர் அடைவீர். இவ்விடம் எப்படி வந்தேனோ அப்படி இங்கிருந்து அவ்விடம் எடுத்துப் போய்ச் சேருவேன். நீரே பார்ப்பீர்.''

இப்படி அன்பும் உற்சாகமும் பொங்கி வர ஹனுமான் சொல்லிக்



கொண்டே போனான். சீதை ஆச்சரியப்பட்டாள். இந்தச் சிறிய வானரம் எப்படி என்னைத் தூக்கிக் கொண்டு, கடலைத் தாண்ட முடியும் என்று சந்தேகித்தாள். இதை உணர்ந்துகொண்ட ஹனுமான் தன் சக்தியைப் பிராட்டிக்குக் காண்பிப்பதற்காக மேடையிலிருந்து கீழே குதித்துத் தன் வடிவத்தைப் பெருக்கிக் கொண்டான். பருவதாகாரமாக வளர்ந்தான். சீதை அதைப் பார்த்துப் பெரு மகிழ்ச்சி அடைந்தாள்.

''வாயு புத்திரனே! உன் சக்தியை நான் உணர்ந்தேன். ஆயினும் நீ என்னை எடுத்துப் போவது உசிதமல்ல. வழியில் அரக்கர்கள் உன்னைத் தடுத்து யுத்தத்துக்கு இழுப்பார்கள். உன்மேல் பாய்வார்கள். ஆயுதங்களை வீசி எறிவார்கள். நீ என்னைக் காக்க வேண்டியதாகும். கவலைப்படுவாய். யுத்தத்தில் உன் புத்தியைச் செலுத்துவது கஷ்டமாகும். எவ்வளவு பலவானாயினும் யுத்தத்தில் வெற்றி என்பது நிச்சயமான விஷயம் அல்ல. உனக்கு அபாயம் நேர்ந்தால் என் கதி என்ன? உன் மேல் அரக்கர்கள் பாய்ந்தும் ஆயுதங்கள் வீசியும் போர் நடந்து கொண்டிருக்கும் போது நான் தைரியமாய் உன் முதுகின் மேல் உட்கார்ந்து கொண்டிருக்க முடியுமா? நழுவிக் கடலில் விழுவேன். இவற்றையெல்லாம் யோசித்தால் என்னை எடுத்துக்கொண்டு நீ கடலைத் தாண்டுவது சரியல்ல என்பது வியக்தம். தவிர, ஹனுமானே! நீ வந்து என்னை அரக்கர்களுக்குத் தெரியாமல் எடுத்துப் போய்விட்டால் அது என் நாதனுடைய வீரத்துக்குக் குறைவாகுமே! ராவணனை எதிர்த்துப் போர் செய்து என்னை மீட்டால் அல்லவோ க்ஷத்திரிய குலத்துக்குக் கௌரவமாக இருக்கும்? ராவணன் என்னைத் திருட்டுத்தனமாக எடுத்து வந்த மாதிரி அவரும் போர் செய்யாமல் என்னை அடைவது சரியாகுமா? அப்பனே! நீ திரும்பிப் போய் ராமனையும் லக்ஷ்மணனையும் வானர சேனையையும் அழைத்து வா. நாதனுடைய பாணங்களால் லங்கை அழிந்து ராவணன் யமாலயம் அனுப்பப்படவேண்டும். வெற்றி நமது என்பதில் சந்தேகமில்லை. என் நாதனுடைய பாணங்கள் பிரளய கால சூரியனைப் போல் ராவண சமூகத்தை எரித்து நாசமாக்கும்'' என்றாள்.

''நான் திரும்பிப் போய் ராமனிடம் என்ன சொல்ல வேண்டும் என்று விரும்புகிறீர்? உம்மைக் கண்டு பேசியதற்கு என்ன அடையாளம் சொல்லுவேன்?'' என்று ஹனுமான் கேட்டான்.

இதைக் கேட்டதும் சீதைக்குப் பழைய நினைவுகள் வந்து விட்டன. கண்களில் நீர் பெருகிற்று.

தனக்கும் ராமனுக்கும் மட்டுமே தெரிந்த அந்தரங்க நிகழ்ச்சிகளை ஹனுமான் தன் நாதனிடம் சொன்னால் தன்னைக் கண்டதற்கு அடையாளமும் ஆகும், தன் ஆற்றாமை நிலையையும் காட்டும் என்று இயற்கை வேகத்துக்கு இசையச் சில விஷயங்களைச் சொன்னாள்:

''என்னுடைய ராமன், தண்டக வனத்தில் ஒருவராக நின்று அசுரர்களை நிர்மூலம் செய்த வீரர்; இந்த லங்கையை ஏன் இன்னும் அழிக்காமல் இருக்கிறார்? அவரால் ஆகாதது ஒன்று உண்டா? ஒரு நாள் நானும் ராமனும் சித்திரகூடத்தில் ஆற்றங்கரையிலிருந்த வனத்தில் விளையாட்டாக அலைந்து ஓய்ந்து போய் ஓர் இடத்தில் உட்கார்ந்தோம். என் மடியில் அவர் சாய்ந்து அப்படியே தூங்கினார். அப்போது ஒரு காக்கை வந்து என்னைமார்பில் கொத்தித் தொந்தரவு பண்ணிற்று. நான் அதை ஓட்டினேன். திரும்பத் திரும்ப வந்து தொந்தரவு செய்தது. நான் ஒரு சிறு கல்லை எடுத்து அதன் மேல் வீசினேன். அப்போதும் அது கேட்கவில்லை. ராமன் எழுந்து நான் கஷ்டப்பட்டுக் கண்களில் நீர் ததும்பியிருந்த நிலையைக் கண்டு முதலில் சிரித்தார். பிறகு என் உடலில் காக்கையால் கொத்தப்பட்டுக் காயமாகியிருந்ததைக் கண்டு இந்தக் காக்கையானது காக்கையல்ல, அசுரன் என்பதைக் கண்டு அஸ்திரம் ஒன்றை எறிந்தார். அது அவனைத் துரத்தித் துரத்திச் சென்று, அசுரன் தப்பிப் பிழைக்க முடியாமல் கடைசியில் வந்து என் நாதன் காலில் விழுந்து சரணடைந்து பிழைத்தான். இதைச் சொல்லுவாய். நான் இன்னும் பல நாள் காத்திருக்க முடியாது. சீக்கிரம் வந்து என் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்.''

இவ்வாறு சொல்லிவிட்டு அழுதாள். மறுபடியும், ''இன்னொருநாள் நாங்கள் இருவரும் தனியாக வனத்தில் நடந்து சென்று கொண்டிருந்தோம். நடந்து நடந்து களைத்துப் போய் வியர்வை வழிந்து, நெற்றியிலிருந்த திலகம் கரைந்து போயிற்று. நாதன் வேடிக்கையாக ஒரு மலைப் பாறையிலிருந்த செந்தாதுவைத் தேய்த்துத் தாமே என் முகத்திலிட்டார். இது அவருக்கு நினைவிருக்கிறதா என்று கேட்டுப் பார்!'' என்றாள். (தொடரும்)

# வண்ணத்தைக் காட்டும்! எண்ணத்தை ஈர்க்கும்

## இல்லங்களில் ...... வளர் செல்வங்கள்

''நீந்தி விளையாடும் வண்ண மீன்களைப் பார்த்துக் கொண்டிருந்தால் நேரம் போவதே தெரிவதில்லை; ஒரு சிறந்த பொழுதுபோக்கு. கடந்த ஒன்பது ஆண்டுகளாக எனக்கு இதில் ஈடுபாடு உண்டு'' என்கிறார் கேரளா ஜுவல்லர்ஸ் உரிமையாளர் திரு பி. வர்கீஸ் எம்மானுவேல்.

மாம்பலம் கிருஷ்ணன் நாயர் தெருவில் வசிக்கும் திரு எம்மானுவேலுக்குக் காலையில் மீன்தொட்டிகளைக் கவனிக்க நேரமில்லை. பிற்பகல் உணவுக்கு வீடு திரும்பியதும், கண்ணாடித் தொட்டிகளில் நீந்தி நெளியும் வண்ண மீன்களைச் சற்று நேரம் பார்த்து மகிழ்வது வழக்கம். பள்ளி இறுதியாண்டு வகுப்பில் படிக்கும் இவருடைய மகன் பாபுவும், குமாரிகள் பேபியும் ராணியும் மீன் வளர்ப்பில் தீவிர ஆர்வமுள்ளவர்கள். ''தொட்டிகளில் உள்ள நீரை அவ்வப்பொழுது மாற்றிப் புதிய தண்ணீர் விடுவது, மீன்களுக்கு உணவளிப்பது—இவை போன்ற எல்லா வேலைகளையும் என் மகனும் பெண்களும் விரும்பிச் செய்கிறார்கள்'' என்கிறார் எம்மானுவேல்.

''தொட்டியின் விலை என்ன?''

''இரண்டடி நீளம், ஓரடி உயரமுள்ள தொட்டியின் விலை பதினைந்து ரூபாய் முதல் பதினெட்டு ரூபாய் வரை ஆகிறது. ஒன்றரை அடி நீளம் ஓரடி உயரமுள்ள சிறிய தொட்டி பன்னிரண்டு ரூபாய்க்குக் கிடைக்கும்'' என்கிறார் எம்மானுவேல்.

கடற்பாசிகளைக் கவினுறத் தொட்டிக்குள் வைத்து இரவு நேரங்களில் மின் விளக்கும் பொருத்தினால் கண்ணாடித் தொட்டிக்குள் வளைய வரும் நீலமும் கறுப்பும் ஆரஞ்சு நிறமும் கொண்ட மீன்கள் கண் கவர் அழகுடன் திகழ்கின்றன. இந்தக் கடற்பாசிகள் எளிதில் துளிர்த்து இலை விட்டுப் பெருகிவிடுகின்றன. இயற்கையான ஒரு சூழ்நிலையைத் தோற்றுவிப்பதுடன் மீன்களுக்கு உணவாகவும் அமைகின்றன.

''இந்த மீன்களுக்கு என்ன உணவு அளிக்கிறீர்கள் ?''

''முட்டையின் வெள்ளைத் திரவத்துடன் மைதா மாவு சேர்த்துப் பிசைந்து சப்பாத்தி செய்து காலையிலும் மாலையிலும் போடுகிறோம். எண்ணெய் சேர்ப்பதில்லை. ஒன்றரை ரூபாய் விலையில் பிளாஸ்டிக் டப்பாக்களில் மீன் உணவு 'அக்வேரிய'த்தில் விற்கிறார்கள். அதனையும் சிறிதளவு நீரில் தூவுவோம். ஒரு டப்பா வாங்கினால் ஒரு மாதத்துக்கு வரும். உணவை வழங்கியவுடன் மீன்கள் கும்பலாக அவற்றைத் தேடி வந்து சாப்பிடும் அழகு பிரமாதம் !'' என்று குமாரி ராணி ஆர்வத்துடன் சொல்கிறாள்.

பாபுவுக்கு 'உயிரியல்' படிக்க விருப்பம். ''கல்லூரியிலும் உயிரியல்தான் படிக்கப் போகிறேன்'' என்கிறான் செல்வன் பாபு. ''மீன்களுக்கு மற்றப் பிராணிகளைப் போல் நோய் நொடி வருவதில்லை. நோய் கண்டு ஒரு மீன் இறந்தால் அதனை உடனடியாகத் தொட்டியிலிருந்து எடுத்தெறிந்து நீரையும் மாற்றி விட வேண்டும். இல்லையேல் அந்நோய் மற்ற மீன்களையும் பிடிக்கும். மாதத்துக்கு ஒரு முறை தொட்டி நீரை மாற்ற வேண்டும். மாற்றும்பொழுது, ஓரளவு பழைய தண்ணீர் தொட்டியிலேயே மிச்சம் வைக்க வேண்டும். குழாய்த் தண்ணீர் கூடாது. அதில், 'குளோரின்' கரைந்துள்ளதால் மீன்களுக்கு ஆபத்து. இவ்விதம் முறையாகக் கவனத்துடன் கண்காணித்து வந்தால் மீன்கள் நன்கு வளரும்'' என்று உற்சாகத்துடன் விளக்குகிறான் செல்வன் பாபு.



இவர்கள் வீட்டில் பலவித வண்ணங்களில் மின்னும் பல ரக மீன்கள் உள்ளன. பொன் மீன்களின் விலை சற்றுக் கூடுதல். ''நீந்தும் பொழுது அதன் உடல் தகதகவென்று பளபளக்கிறதைப் பாருங்கள் !'' என்கிறாள் ராணி. நகைக்கடை முதலாளியின் குமாரி என்பதாலோ என்னவோ பொன் மீனிடம் இவளுக்கு அலாதியான ஆசை!

''தொட்டிகளையும் மீன்களையும் வாங்க ஆரம்பத்தில் கொஞ்சம் செலவானாலும் மீன்களை வளர்ப்பதற்காகும் செலவு மாதம் ஐந்து ரூபாய்தான். குழந்தைகளுக்கு அதில் உள்ள ஆர்வத்தையும் உற்சாகத்தையும் கவனித்தால், செலவு ஒரு பொருட்டன்று'' என்கிறார் திரு எம்மானுவேல்.

பேட்டி : பாணன்

# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி



52

முதன் முதலில் 1888-ஆம் ஆண்டில் பகவத்கீதையை நான் கண்டேன். அப்பொழுதே நான் தீர்மானித்தேன். இது யுத்தத்தைப் பற்றி அரசகுமாரனுக்கும் கண்ணனுக்கும் நடந்த ஓர் உண்மை சம்பாஷணை என்று வைத்துக் கொள்ளக் கூடாது என்று எனக்குள் முடிவு கட்டிக் கொண்டேன். போரை ஓர் உருவமாக வைத்துக் கொண்டு மனித உள்ளத்தில் எப்போதும் நடைபெறும் யுத்தமாகிய மனக் குழப்பத்தைப் பற்றிய உபதேசம் கீதை என்றே நான் எப்போதும் கருதி வருகிறேன். மனிதன் உள்ளத்தை ஒரு புறம் நன்மை இழுக்கின்றது. மற்றொருபுறம் காமக் குரோதாதிகள் இழுக்கின்றன. இதுவே யுத்தம். இந்த யுத்தத்தைத்தான் குருக்ஷேத்திர யுத்தமாக வைத்துக் கொண்டு கண்ணன் உபதேசிக்கிறான். உள்ளத்தில் எப்போதும் நடைபெறும் மல்யுத்தத்தைப் பற்றி உபதேசிப்பதற்காகப் பாரத யுத்தத்தை எடுத்துக்காட்டாக வைத்துக் கீதை அமைந்திருக்கிறது. எனக்குப் பல ஆண்டுகளுக்குமுன் உண்டான இந்தக் கருத்து பிறகு சமய ஆராய்ச்சி நன்றாகச் செய்து கீதையை ஆழ்ந்து படித்த பிறகு ஊர்ஜிதமாயிற்று. மகாபாரதத்தை ஆராய்ந்த பிறகு இன்னும் உறுதிப்பட்டது. கதாபாத்திரங்கள் உண்மையில் அரசு புரிந்தும் வாழ்ந்தும் வந்தவர்களாகவே இருக்கலாம். ஆனால் அவர்களை வைத்துக் கொண்டு, தர்மத்தைப் போதிக்கவே மகாபாரதம் எழுதப்பட்டிருக்கிறது. வெறும் சரித்திரமல்ல.

ஆயுதங்கள் எடுத்து யுத்தம் செய்வது தர்மமே என்று மகாபாரதத்தில் உபதேசித்து நிரூபிக்கப்படவில்லை. விரோதத்திலும் போர் செய்வதிலும் உண்மையில் நன்மையில்லை என்றே மகாபாரதம் நிரூபிக்கிறது. யுத்தத்தில் வெற்றி பெற்றவர்கள் பிறகு கண்ணீர் வடித்து, துயரம் மேலிட்டுச் சங்கடப்படுவதாகவே பாரதத்தில் வர்ணிக்கப்படுகிறது. ஆயுத பலங்கொண்டு செய்யப்படும் யுத்தத்தில் வெற்றியடைவதனால் துக்கமேயன்றிச் சந்தோஷமில்லை என்பதே மகாபாரதத்தின் முடிவு. பாரதத்தின் சூடாமணி கீதையாகும். இரண்டாவது அத்தியாயத்தில் கீதாசாரியன் என்ன உபதேசிக்கிறான்? ஆயுதங்களைப் பற்றி உபதேசிக்கவில்லை. வியூகங்களைப் பற்றி உபதேசிக்கவில்லை. பூரண ஞானியினுடைய லக்ஷணங்களைப் பற்றி உபதேசிக்கிறான். ஒருவன் ஸ்திர புத்தியும் சம நிலையும் அடைந்ததாக எப்பொழுது சொல்லலாம் என்பதைப் பற்றித்தான் உபதேசிக்கப்படுகிறது. ஆயுதங்கள் எடுத்துப் போர் செய்யும் வீரனுடைய இலக்கணம் சொல்லப்படவில்லை. அந்த அத்தியாயத்தில் யுத்தத்தில் ஆயுதங்கள் எடுத்து எதிர் நின்று போர் செய்யும் இரு கட்சிகளுக்கு உதவக்கூடிய விஷயம் ஏதுமில்லை.

கீதையில் உபதேசம் தரும் கண்ணன் பூரண புருஷன். முற்றுணர்வு பெற்றவன். நம்மைப் போன்ற மனிதனல்ல. நாம் தெய்வமாகக் கருதும் கிருஷ்ணன் இருந்ததே இல்லை என்று நான் சொல்லவில்லை. இருந்தான். ஒரு சரித்திர புருஷனுக்கு அதிமானுஷ்ய இலக்கணங்களைக் கற்பித்து, ஒரு பூரண அவதாரமாகச் செய்யப்பட்டிருக்கிறது. தர்மப் பிரசாரத்துக்கு இது அவசியம். தவறு ஒன்றுமில்லை.

மக்களுக்கு மிகப் பெரிய சேவை யாரேனும் செய்தால் அவனை ஹிந்து சம்பிரதாயத்தில் அவதாரமாகக் கருதுவது வழக்கம். ஜீவன்களனைத்தும் ஈசனுடைய அவதாரங்களேயாகும். ஆயினும் எல்லாச் சாதாரண மனிதர்களையும் நாம் கடவுள் அவதாரமாக வழிபடுவதில்லை. தன்னுடைய வாழ்க்கையில் தர்மத்தை நிலைநாட்டி மக்களுடைய பாராட்டுதலைப் பெற்றவன் காலம் சென்றபின், பின்சந்ததியாரால் அவதார புருஷனாகக் கருதப்படுகிறான். ஆண்டவனுடைய பெருமைக்கு இது குறையாகாது. அறவழியில் நின்று பெருமையடைந்தவர்களை அவதார புருஷர்களாகப் பாவிப்பது உண்மையைப் புறக்கணித்ததாக நினைக்கலாகாது. ''பரம்பொருள் ஆகிய நெருப்பினின்று பறந்த ஒரு பொறியாவான் ஆதம்'' என்பது உருதுப் பழமொழி. தர்மம் பிழையாமல் வாழ்பவன் கடவுளுடைய அம்சம் என்பதில் சந்தேகமில்லை. இதை ஒப்புக் கொண்டால் கீதாசாரியனைப் பாரத மக்கள் அவதார புருஷனாக வழிபடுவது சரியே என்பதைக் காணலாம்.

## அத்தியாயம் 15

அமெரிக்காவில் இந்த மாதிரியெல்லாம் நடப்பதுண்டு. நடு வழியில் வண்டியில் போகிறவர்களை நிறுத்தி வேண்டிக் கொண்டால் ஏறிக்கொள்ளலாம். ஏற்றிக்கொள்கிற பழக்கம் அங்கெல்லாம் சகஜம். பெண்களும் இப்படித் தனியே வந்து ஏறிக்கொள்வது சர்வசாதாரணம். இதை 'ஹிட்ச் ஹைஹக்கிங்' என்பார்கள். பாஸ்கரனுக்கே இந்த அநுபவம் உண்டு.

அந்தப் பழக்கமெல்லாம் இந்த நாட்டில் கிடையாது. பெரிய நகரங்களில் இப்படி எங்கேயாவது நடக்குமோ, என்னவோ, வேறு எங்கும் இந்த மாதிரி வரவும் மாட்டார்கள். வந்தாலும் ஏற்றிக் கொள்ளவும் மாட்டார்கள். அதிலும் பெண்கள் இப்படித் தனியே வந்து கேட்கவே மாட்டார்கள் முதலில். அப்புறம் அல்லவா ஏற்றிக் கொள்கிற பேச்சு ?

அழகான பெண்கள் தனியே இருந்து எதையாவது காரணம் சொல்லிக் கொண்டு வண்டியில் ஏறிக் கொள்ள வந்தால் அது இங்கெல்லாம் சந்தேகப்பட வேண்டிய விஷயம். இப்படிப்பட்டவர்களிடம் பணத்தைப் பறி கொடுத்து விட்டு ஏமாற வேண்டாம் என்று போலீஸிலேயே எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்.

ஆகையால் இந்த 'ஹிட்ச் ஹைஹக்கிங்' பழக்கமெல்லாம் இங்கே அடியோடு இல்லை. இங்கே தெரிந்தவர்கள் யாராவது வழியில் வந்து விட்டால்கூட, பார்க்காதது போல் போய் விடுகிற பழக்கம்தான் அதிகம். பெரும்பாலும் கார் வைத்திருப்பவர்களுக்குச் சில தனிச்சாமர்த்தியங்கள் உண்டு. காரியம் ஆகவேண்டிய சமயத்துக்கு ஒரு கண்ணும் அப்படியில்லாத சமயங்களில் வேறொரு கண்ணும் படைத்தவர்கள். பாஸ்கரனுக்கு இந்த அநுபவமும் உண்டு.

பாஸ்கரனுக்கு இது முதலில் ஆச்சரியமாகத்தான் இருந்தது. இப்படி ஓர் அழகான பெண், என்னதான் முன்பே பார்த்திருந்தவளாய் இருந்தாலும் இந்த இரவு நேரத்தில், அவனோடு தனியாகப் பயணம் செய்யத் துணிந்து வந்திருப்பது நம்பவே முடியாததாக இருந்தது. இதெல்லாம் கனவு இல்லையே என்று தன்னைக் கிள்ளிக்கூடப் பார்த்துக் கொண்டான்.

# காணிக்கை

## ஆர்வி

குளக்கரையில் நின்ற வண்டிக்கு அருகில் அவள் நிற்பது தெரிந்து ஓடோடி வந்தான். மற்ற எண்ணங்கள் எல்லாம் மறைந்து விட்டன. அந்தச் சில நிமிஷ நேரம் அவளைக் காக்க வைத்ததுகூட அவனுக்குப் பொறுக்கவில்லை. மனம் பரபரத்துப் போனான்.

''வெளியிலேயே நிற்பானேன் ?... உள்ளே ஏறி உட்கார்ந்திருக்கலாமே!'' என்று கேட்டுக் கொண்டே அவன் வேகமாக வந்தான்.

''லாக் பண்ணியிருக்கிங்க ளே, மறந்துட்டீங்களா ?''

''ஓ. ஐ ஆம் ஸோ ஸாரி. இதோ திறந்து விடறேன்!''

கதவைத் திறந்து விட்டதும் அவள் முன்ஸீட்டிலேயே ஏறிக் கொண்டாள். பாஸ்கரனுக்கு இப்போது நெஞ்சு படபட வென்று அடித்துக் கொண்டது. இதை அவன் எதிர்பார்க்கவில்லை. இரவு நேரத்தில் தனியாகச் செல்வதால் அவள் பின்னால் போய் உட்காரத்தான் விரும்புவாள் என்று அவன் நினைத்தான். தனியாகப் பின்னால் உட்கார



அவளுக்குப் பயம் என்று அவனுக்குத் தெரியாது. உணர்ச்சி மிகுதியால் அவனுக்கு மூச்சுத் திணறிற்று. பேச்சும் வரவில்லை.

''சாப்பிட்டாச்சா?'' என்று சும்மா கேட்டு வைத்தான்.

''ஊஹும்; இல்லை.''

''பக்கத்திலேதான் நாகர் கோயில். அங்கே போய்ச் சாப்பிட்டுக்கலாம்.''

அவள் ஒன்றும் சொல்லவில்லை. வண்டி திருவிழாக் கூட்டத்தைத் தாண்டி, பெரிய சாலையில் போகத் தொடங்கியதைப் பார்த்துக் கொண்டே வந்தாள். அவனுக்கு என்னவோ ஒரு பக்கம் ஆனந்தமாகவும் இன்னொரு பக்கம் இது அல்ப சந்தோஷமாக முடிந்து விடப் போகிறதே என்று கவலையாகவும் இருந்தது.

''பார்த்து இரண்டு வருஷங்கள் இருக்குமே. என்னை எப்படி அடையாளம் தெரிஞ்சுது?'' என்று கேட்டான் அவன்.

''உங்களுக்கு எப்படித் தெரிஞ்சுது?'' என்றாள் அவள்.

''அன்னிக்குப் பார்த்தாப்பலேயே இருக்கிறதனாலே தெரிஞ்சுது. சட்டுன்னு

மறந்துடற முகமா இருந்தால் தெரிஞ்சிருக்காது.''

''எனக்கும் அப்படியேதான்!''

''அப்படியேவா இருக்கேன் நான், துளிக்கூட மாறாமல்?''

''மாறுதல் இருக்கு. முந்தியைவிட இன்னும் கொஞ்சம் தெளிவாயிருக்காப்பலே....!''

''அங்கேயும் அப்படித்தான். அதை நான் சொல்லல்லே.''

''சொல்லாட்டாலும் சில விஷயங்களை முகத்தைப் பார்த்தே தெரிஞ்சிண்டுடலாம்; இல்லியா?''

அவள் பேச்சு அவனுக்கு இன்பமாய் இருந்தது. பக்கத்தில் தேவ கன்னிகை போல, இருண்ட புதரில் பூத்த செந்தாழை மடல்போல, மணமாய் மணத்துக் கொண்டு, மயக்கமாய்ப் போதையூட்டிக் கொண்டு....

இவள் உண்மையிலேயே வீரசோழபுரத்துப் பெண்தானு, இல்லே அவள் வடிவில் வந்திருக்கும் மோகினியா என்றுகூட நினைத்தான்.

''எது வரையிலே போகணும்?''

''நீங்க இப்ப எதுவரையிலே போறுப்பலே....?''

''நானு? நான் வந்து ரொம்பத் தூரம் போகிறவனுச்சே!''

''அப்ப ரொம்ப நல்லதாப் போச்சு. அதான் நினைச்சேன் நான்!''

அவள் என்ன சொல்கிறுள் என்று அவனுக்குப் புரியவில்லே.

''அப்படின்னு?''

''அதாவது நான் திருநெல்வேலி போகலாம்னு நினைச்சேன். நீங்க ரொம்பத் தூரம் போறதுனுலே திருச்சிக்கே போயிடறேன்.''

பாஸ்கரனுக்கு உடனே பேச்சு சப்பிட்டு விட்டது.

''நான் இப்பத் திருவனந்தபுரம்னு போறேன்? அந்தப் பக்கம் போகலியே.''

''அப்படியா? நீங்க இப்ப நம்ம ஊர்ப் பக்கம் போகல்லியா?''

''ஊஹும்.''

''அப்ப நாகர்கோயில்லேருந்து நான் பஸ்ஸிலே போயிடறேன்.''

''என்னமோ பார்க்கலாம்'' என்று சொல்கிற போதே அவனுக்குச் சுருதி குறைந்து விட்டது. இந்தச் சந்தோஷம் நீடிக்க வேண்டுமே என்று அவன் கவலேப்பட்டது எத்தனே சரியாகப் போய் விட்டது.

அப்புறம் நாகர்கோயில் வரையில் அவனுல் பேசவே முடியவில்லே. அங்கே போய் விசாரித்ததில் இனி எந்த இடத்துக்கும் பஸ் இல்லே என்று தெரிந்தது. கடைசிப் பஸ் போய்விட்டதாம்!

''முதலில் சாப்பிடுவோம்; பிறகு பேசிக் கொள்ளலாம்'' என்று ஹோட்டலுக்குப் போய் உட்கார்ந்தார்கள்.

''கன்னியாகுமரியிலே பாத்தப்ப இன்னும் ஏழெட்டுப் பேர் இருந்தாங்களே. அவங்கள்ளாம் எங்கே?'' என்று பாதி சாப்பிடும் போது கேட்டான் பாஸ்கரன்.

''அவங்கள்ளாம் கடைசிப் பஸ்ஸிலே புறப்பட்டுப் போயாச்சு!''

''ஏன் தனியா விட்டுட்டுப் போனுங்க?''

''அவங்க விட்டுட்டுப் போகல்லே. தப்பு என் மேலேதான்.''

''யாரு அவங்கள்ளாம்?''

''என்னுடை திருச்சி கல்லூரியிலே படிக்கிறவங்க. லீவிலே கன்னியாகுமரி பார்க்கலாம்னு வந்தோம். பார்த்துட்டுத் திரும்பற சமயத்திலே நான் ஒரு அசட்டுத்தனம் செய்துட்டேன். அதன் விளேவுதான் இது!''

''என்ன அப்படி அசட்டுத்தனம்?''

''அது என்னத்துக்கு இப்ப? இப்ப நடு வழியிலே மாட்டிக்கிண்டு முழிக்கிறது போருதா?''

''அந்த அசட்டுத்தனம் எதுவாயிருந்தாலும் அது வாழ்க!'' என்று சிரித்துக் கொண்டே சொன்னுன் பாஸ்கரன்.

''இதிலே என்ன உங்களுக்குத் திருப்தி?''

''அந்த அசட்டுத்தனத்தினுலேதானே நாம இப்ப சந்திச்சுப் பேச முடிஞ்சுது. அது திருப்தியில்லேயா?''

இதைக் கேட்டதும் அவளுடைய முகம் அழகாகச் சிவந்தது.

''ஊருக்குப் போறதுக்கு முன்னுடி உங்களேப் பார்த்து ஒரு வார்த்தையாவது பேசிட்டுப் போகலாம்னு ஆசைப்பட்டேன். அதனுலே வந்த விளேதான் இது! நீங்க சிரிக்கமாட்டீர்களா?''

''இதென்ன, பெரிய குண்டாத் தூக்கி என் தலேயிலேயே போட்டால்?''

''எல்லாரும் போக வேண்டாம்னு தடுத்தாங்க. பஸ் புறப்பட்டால் போயிடுவோம்னு பயமுறுத்திஞங்க. என் ஃபிரண்டு சுசிலாகூடக் கேட்டாள், 'தனியா வரத்துக்குத் தைரியம் இருக்கா?'ன்னு. திருச்சிக்கேகூட வருவேன்னு தைரியமாச் சொல்லிட்டுப் போனேன். கடைசியிலே என்ன ஆச்சுன்னு, உங்க கார் அப்பத்தான் புறப்பட்டுப் போயிண்டிருக்கு. பஸ் ஸ்டாண்டுக்குப் போனுல் அங்கேயும் பஸ் புறப்பட்டுப் போயிடுத்து. அப்புறம் பார்த்தால் அதுதான் கடைசிப் பஸ்ஸாம். கூல் டிரிங்க் ஸ்டால்

# கீதைக் கதைகள்



'வினாவைப் பொறுத்து மட்டுமே விடை அமைவதில்லை. வினா கேட்கப்படும் பாவத்தைப் பொறுத்தும் விடை அமையும்....'

## 18. வினா

அறநெறிப் போதனை நடைபெற்றுக் கொண்டிருந்தது.

"பயனைத் துறப்பவன் தன் கருமத்தில் ஆழ்ந்து ஒன்றி விடுகிறான். அவன் நோக்கும் போக்கும் பரந்ததாகவும் தாராளமானதாகவும், சமமானதாகவும் அமையும். இதனால், அவன் பல்வேறு தத்துவ ஞானங்களின் வலையில் சிக்குப்படுவதில்லை. அதே சமயம் தன் தத்துவத்தை விடுவதுமில்லை."

துறவியின் போதனையைப் பக்திப் பரவசத்துடன் இஷ்ட மாணக்கன் கேட்டுக் கொண்டிருந்தான்.

அப்பொழுது அவ்விடம் கிருகஸ்தன் ஒருவன் வந்தான்.

"சுவாமி மோட்சம் அடைவதற்கு வீடு வாயிலைத் துறத்தல் அவசியமா?" என்று கேட்டான்.

"அவற்றைத் துறக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஜனகருக்கு மோட்ச கதி கிட்டவில்லையா? அவர் அரண்மனையில்தானே வாழ்ந்தார். அவருக்கு மோட்ச கதி சித்திக்குமானால் நீ ஏன் வீடு வாசலைத் துறத்தல் வேண்டும்?" என்று விளக்கி அவனை அனுப்பி வைத்தார் துறவி.

அவன் சென்று சிறிது நேரத்துக்கெல்லாம் வேறொரு கிருகஸ்தன் துறவியிடம் வந்தான்.

"வீடு வாயிலைத் துறக்காமலே மோட்சம் கிடைக்குமோ?" என அவன் கேட்டான்.

"யார் அப்படிச் சொன்னது? வீட்டிலிருந்தபடியே மோட்சம் சித்திக்குமானால், ஏன் சுகர் சௌனகர் முதலியவர்கள் வீடு வாயிலைத் துறந்தார்கள்? அவர்கள் மூடர்களா?"

துறவி இருவருக்கும் கூறிய விடைகளைக் கேட்டுக் கொண்டிருந்த மாணக்கனுக்கு இயல்பாகவே ஓர் ஐயம் ஏற்பட்டது.

"சுவாமி! இருவரும் ஒரே கேள்வியைக் கேட்டார்கள். இருவருக்கும் நீங்கள் இரண்டு எதிர்த்துருவமான பதிலை அளித்தீர்கள். ஒரு வினாவுக்கு ஒரு குறிப்பிட்ட விடைதானே பொருந்துவதாக அமையும்?"

"அப்படியல்ல. இரு விடைகளும் சரியானவையே. வினாவைப் பொறுத்து மட்டும் விடை அமைவதில்லை. வினா கேட்கும் பாவத்தைப் பொறுத்தும் விடை அமையும். முதலில் வந்தவன், 'வீடு வாயிலைத் துறத்தல் அவசியமா?' எனக் கேட்டான். தேவையானால் வீடு வாயிலைத் துறக்கும் பக்குவ நிலை அவனிடமிருக்கிறது. அப்பக்குவ நிலை அடைந்தவன் ஏன் வீடு வாயிலைத் துறக்க வேண்டும்? எனவே அவன் அவற்றைத் துறக்க வேண்டியதில்லை என்பதும் உண்மையாக அமைந்தது. இரண்டாமவன் 'வீடு, வாயிலைத் துறக்காமலே மோட்சம் கிட்டுமா?' எனக் கேட்டான். அந்தக் கேள்வியிலேயே அவன் அவற்றில் வைத்திருக்கும் பந்தம் நன்றாகத் தெரிகிறது. அத்தகைய அபக்குவன் ஒருவன் வீடு வாயிலைத் துறத்தல் வேண்டும் என்பதும் உண்மை" எனத் துறவி விளக்கினார். - எஸ். பொன்னுத்துரை

---

வச்சிருக்கிறவன் சொன்னான். அங்கே நிக்கிற பஸ்ஸிலே ஏறி நாகர்கோயில் போயிட்டால், அங்கேயிருந்து திருநெல்வேலிக்குப் பஸ் இருக்கு. போயிடலாம்னு யோசனை சொன்னான். சரின்னு ஏறிட்டேன். கபீந்திரம் வந்தது. குளக்கரையிலே உங்க கார் நின்னதைப் பார்த்துட்டேன். எப்படி இருந்தது தெரியுமா எனக்கு? என்ன ஆனாலும் ஆகட்டும்னு தைரியமா இறங்கிட்டேன்!"

"ரொம்பத் துணிச்சல்தான்! நான் காரிலேதான் வந்திருக்கேன்னு எப்படித் தெரியும்?"

"அது முந்தாநாளே தெரியும். உங்களையும் உங்க காரையும் நம்பர் முதற்கொண்டு முந்தாநாளே நான்குநேரியிலேயே பார்த்துட்டேன். நீங்கதான் திரும்பிக்கூடப் பார்க்கல்லே!"

"அப்படியானால் அது என் தப்புத்தான். மன்னிப்புக் கேட்டுக்கறேன். வீரசோழபுரத்திலேயும் கன்னியாகுமரியிலேயும் பார்த்துப் பேசறதுக்கு நான் எத்தனை பாடுபட்டேன், தெரியுமா? அப்போதெல்லாம் திரும்பிக் கூடப் பார்க்காமெ இருந்தது யார் தப்போ?"

"அந்தத் தப்புக்குத்தான் தண்டனை இப்ப அநுபவிக்கிறேனே. இன்னும் என்ன செய்யணுமாம் இதுக்குமேலே?"

"இன்னும் பேரைக்கூட நான் தெரிஞ்சுக்கல்லே!"

"அது வந்து என் தப்பா? எங்கிட்டே பேசறப்போ இப்படியெல்லாம் பொத்தாம் பொதுவாகப் பேசாமல் வாயை விட்டு, 'உன் பேர் என்ன?'ன்னு கேட்டால் என்ன மோசமாம்? உடனே சொல்லிட்டுப் போறேன். அமெரிக்காவெல்லாம் போயிட்டு வந்திருக்கிறவாளுக்கு வயசிலே சின்னவளை, 'வா—போ'ன்னு கூப்பிடறதுக்குக்கூட என்ன கூச்சமாம்? நானும் அப்போ பிடிச்சுப் பார்க்கிறேன், ரொம்ப ஜாக்கிரதையான்னு பேசியாகிறது!"

''நானும் என்னமோன்னு நினைச்சேன். அடேயப்பா, நீ வந்து பெரிய போக்கிரி !''

''நான் ஒண்ணும் போக்கிரியில்லே, நான் வந்து யாமினி !''

''யாமினி ! என்ன அழகான பேரு! பெயர் அழகைச் சொல்றதா, பேசற அழகைச் சொல்றதா, எந்த அழகைச் சொல்றதுன்னே தெரியல்லே எனக்கு. ஒண்ணை ஒண்ணு அப்படித் தூக்கி அடிக்கிறது !''

''ஒண்ணையும் சொல்ல வேண்டாம். சொல்லாமல் இருக்கிறதுதான் அழகு'' என்றாள் யாமினி.

## அத்தியாயம் 16

இரவின் ஜிலுஜிலுத்த காற்றில், தெரு விளக்குகளின் வெளிச்சத்தில் காலாற நின்று, யாமினியோடு கலகலப்பாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருப்பது பாஸ்கரனுக்கு ஒரு சுகமான அநுபவமாக இருந்தது. சாலையில் போவோர், தங்களைக் கவனித்துக் கொண்டே செல்வதைப் பார்த்து அவனுக்கு உற்சாகமாகவும் இருந்தது. அவர்கள் என்ன நினைப்பார்கள் என்ற கற்பனை ரசமாகவும் இருந்தது.

''அப்புறம் என்ன பிளான் ?'' என்று கேட்டாள் யாமினி.

'' எனக்கு ஒரு ஐடியா படறது. திருச்சிக்குப் போறதுக்கு நீ திருநெல்வேலிக்குப் போகணுங்கிறது அவசியமில்லே. திருவனந்தபுரத்திலேருந்தே எக்ஸ்பிரஸ்லே ஏறி நேரே போகலாம். வேகமாகப் போகிற பாசஞ்சர்லேயும் போகலாம். திருவனந்தபுரத்தையும் பார்த்தாப்பலே இருக்கும். அங்கே போய்த் தங்கறதும் பிரச்னையில்லே. நான் மத்தியானமே ரூம் ரிசர்வ் பண்ணச் சொல்லித் தந்தி கொடுத்திருக்கேன். அங்கேயே போயிட்டால் என்ன ?'' என்றான் பாஸ்கரன்.

''அதான் தேவலே. நல்ல ஐடியா!''

'' இப்பப் புறப்பட்டால் பத்தரைக்கெல்லாம் போய்ச் சேர்ந்துடலாம். நிதானமாகவே போகலாம். இன்னும் கொஞ்சம் வேகமாப் போகலாம்னு பத்து, பத்தேகாலுக்கே போயிடலாம். ஐம்பது மைல்தானே ?''

''அப்பப் போயிடுவோம். அவசரம் என்ன, நிதானமாகவே போகலாம். அதான் எப்பவுமே நல்லது, இல்லையா?''

''ஆமாமாம். அதனால்தானே ரெண்டு வருஷங்களுக்கு முன்னாலே சந்திச்சும் இத்தனை நாட்கள் கழிச்சுப் பேசியிருக்கோம். இந்த நிதானத்தை விடவா ?''

''நான் அதைச் சொல்லல்லே. வண்டியிலே வேகமாப் போறதைச் சொல்றேன் !''

''அந்த வேகத்தையும்தான் சொல்றேன்'' என்றான் பாஸ்கரன்.

''நான் வேறு எந்த வேகத்தையும் சொல்லல்லே!'' என்று சொல்லி விட்டு வண்டியினுள் அமர்ந்தாள் யாமினி.

திருவனந்தபுரம் சாலையிலே வண்டி போகத் தொடங்கியது. ''எனக்கு என்னமோ ஆச்சரியமாய் இருக்கு'' என்றான் அவன்.

''என்னது ?''

''என்னைப் பத்தி நீ இவ்வளவு தூரம் விசாரிச்சுத் தெரிஞ்சிண்டிருப்பேன்னு நான் எதிர்பார்க்கவேயில்லே. நான் அமெரிக்கா போயிட்டு வந்ததையெல்லாம் தெரிஞ்சு வச்சிருக்கியே நீ!''

யாமினி பதில் சொல்லாமல் பேசாமல் இருந்தாள்.

''என்ன யோசனை ?''

''அந்தக் குமரியன்னை என் கண்ணிலேயே நிக்கறாப்பலே இருக்கு !''

''அதானே பார்த்தேன், உன்கண் இத்தனை அழகா யிருக்கேன்னு. பளபளன்னு பாலைக் குழைச்சுப் பூசினாப்பலே....!''

'' உங்களுக்கு நினைவிருக்கா ?''

'' எது ?''

''வீரசோழபுரத்திலே நாம முதல் முதல்லே சந்திச்ச இடம்கூட அம்மன் சந்நிதிதான்.''

''இருக்கும். ஆனால் எனக்குச் சரியாக ஞாபகம் இல்லே. மன்னியோட பேசிண்டிருந்த நீ, நான் வந்ததும் ஓடினே பாரு. அதான் நினைவிலே இருக்கு. அப்படி ஓடினவள் இப்ப என் பக்கத்திலேயே தனியா உக்காந்துண்டு வரதை என்னாலே நம்பவே முடியல்லே. இந்த அதிசயம் எப்படி நடந்தது ?''

'' அது அந்தத் தேவிக்குத்தான் தெரியும் !''

''எது, ஓரேயடியா பக்தியிலே மூழ்கியிருக்காப்பலே இருக்கே!''

''இன்னிக்கு நடந்ததையெல்லாம் நினைச்சுப் பார்த்தா என் உடம்பு அப்படித்தான் புல்லரிக்கிறது. பாருங்களேன், இப்பப் பேசிண்டிருக்கப்பவே உடம்பெல்லாம் சிலிர்க்கிறதை! கையைத் தொட்டுப் பாருங்களேன், தெரியும்!'' அவள் நீட்டிய முன்னங்கையை, பாஸ்கரன் இடது கையாலேயே மிருதுவாக வருடிப் பார்த்தான். மொழு மொழுவென்று இருந்த கை சிலிர்த்துத்தான் இருந்தது.

''எப்படி இருக்கு ?''

"தொட்டதும் எனக்கும் சிலிர்க்கிறது."

"இந்த ஊரிலே பஸ் கிடைக்காமல் போனதுக்கு, உங்களையும் சந்திக்காமல் போயிருந்தால் என் கதி என்ன ஆகியிருக்கும்?"

"சொல்லாதே! சந்தோஷமாய்ப் பேசிண்டு வர்றதை விட்டுட்டு எதுக்காகச் சங்கடப்படச் சொல்றே?"

"அதுவும் சரிதான். அப்புறம் உங்க புரோக்கிராம் என்ன?"

"இன்னிக்கு ராத்திரி நன்றாத் தூங்க வேண்டியது. காலையில் கோயில், ஊரையெல்லாம் சுத்திப் பார்க்க வேண்டியது. அப்புறம் ரெஸ்ட். சாயங்காலம் ஷாப்பிங். ராத்திரி உன்னை ரயிலேற்றிவிட வேண்டியது. திரும்பவும் காலையிலே புறப்பட்டுக் கொல்லம், ஆலப்புழை வழியாகக் கொச்சி போகப் போறேன். இப்போதைக்கு என் புரோக்கிராம் இதுதான்!"

"ஏது, பெரிய டூர் போலிருக்கே!"

"பெரிய டூர்தான்."

"அமெரிக்காவையெல்லாம் பார்த்தாச்சு. இங்கேயும் பார்த்துடலாம்னு?"

"அப்பத்தானே எங்கெங்கே என்ன என்ன நடக்கிறது, எதெதுக்கு வாய்ப்பு இருக்குன்னு தெரியும்."

"ஆனா, தனியாப் போறதுன்னா கஷ்டமாய் இருக்குமே?"

"இருந்தால் அதுக்கு என்ன செய்யறது? எங்கேயும் இந்த மாதிரி துணையை எதிர்பார்க்க முடியுமா, என்ன?"

யாமினி என்ன நினைத்தாளோ, என்னவோ, மௌனமாக இருந்தாள்.

"ஆமாம்: மாத்து டிரஸ்கூடக் கையிலே இல்லே போலிருக்கே. நாளைக்கெல்லாம் என்ன செய்வே?"

"எப்படியோ மானேஜ் செய்துக்க வேண்டியதுதான். என் 'பாக்'கெல்லாம் சுசிலாகிட்டே இருக்கு."

"யார் அந்தச் சுசிலா? அவள் பேரு அடிக்கடி வருதே!"

"என் சிநேகிதி. கெட்டிக்காரி. அவளுக்கு எல்லாம் தெரியும்."

"என்னைப் பத்தியும் அப்பச் சொல்லியிருப்பியோ?"

"கொஞ்சம். எங்க அஸிஸ்டென்ட் ஹெட்மாஸ்டரோட தம்பின்னு. அமெரிக்காவுக்கெல்லாம் போயிட்டு வந்தவர்னு. பேசினதில்லேன்னு. பேசணும்னு! குமரியம்மன் சந்நிதியிலே என்னைப் பார்த்துப் பேச முடியாமல் தவிச்சார்னு; சிரிச்சார்னு!"

"இது என்ன, நான் எங்கே தவிச்சேன்; சிரிச்சேன்?"

"என்னைப் பார்த்துப் பேச நினைக்கல்லியா? புன்னகை செய்யல்லியா?"

"ஆமாம் நினைச்சேன்; பார்த்த சந்தோஷத்திலே புன்னகை வராதா?"

"அதைத்தான் சொன்னேன். எனக்கும் அப்படியிருந்தது. சொன்னேன்."

"நியாயந்தான். நீ அப்படிச் சொன்னது சரிதான், பேச முடியாமெப் போயிட்டுதேன்னு எனக்கு ரொம்ப வருத்தமாத்தான் இருந்தது."

"அது தெரிஞ்சுதான் சுசிலா என் கட்சியா இருந்தாள். பார்த்துட்டுப் பஸ் புறப்படறதுக்குள்ளே வந்துடச் சொல்லிச் சொன்னாள். அந்தப் பஸ் போயிட்டா அடுத்த பஸ்லேன்னு சொல்லிட்டு வந்தேன். அதான் இப்படி ஆயிட்டுதே. இருந்தாலும், அவள் கவலைப்பட மாட்டாள். உங்களைப் பார்த்திருப்பேன்னு இருப்பாள்!"

"நல்ல காலம். அந்தச் சங்கீதக் கச்சேரி உன்னைக் காப்பாத்திட்டுது."

"தேவி என்னைக் காப்பாத்திட்டாள், கச்சேரி மூலமா."

யாமினியின் நம்பிக்கையில் பொருள் இருந்ததை அவனும் உணர்ந்தான். அது வெறும் குருட்டு நம்பிக்கையாக அவன் நினைக்கவில்லை.

"உன்னைப் பார்த்தால் எனக்குத் தெரிஞ்ச ஒருத்தி ஞாபகம் வரது. சோபனா ஜோஷின்னு பேரு. உங்க ரெண்டு பேருக்கும் என்னவோ ஓர் ஒற்றுமை இருக்கு. அது என்னன்னு எனக்குச் சொல்லத் தெரியல்லே."

யாமினி அவனைத் தீவிரமாகத் திரும்பிப் பார்த்தாள்.

"பார்க்க வேண்டாம்! பாவம், அவள் இப்ப இல்லே."

அவனே மேலே சொல்லட்டும் என்று அவள் காத்திருந்தாள். ஆனால் எதையோ அடக்கமாட்டாமல் தன் உதடுகளை இறுக அவன் மூடிக் கொள்ள முயல்வதைத்தான் கண்டாள். ஏழெட்டு மைல் வரை வண்டியின் வேகத்துக்குப் போட்டியாக அவரவர்களுடைய எண்ணங்களும் சென்று கொண்டிருந்தன. வழியில் ஏதோ ஓர் ஊர் வந்தது. ஒரு நல்ல கடையும் கண்ணில் பட்டது.

"வண்டியை நிறுத்தினால் தேவலை. தாகமாய் இருக்கு!" என்றாள் யாமினி.

"எனக்கும்தான்!" என்று கடைக்கு எதிரே வண்டியை நிறுத்தினான் அவன்.

வண்டி மறுபடியும் புறப்பட்ட பிறகு, பேச்சு கொஞ்சம் கொஞ்சமாக அமெரிக்காவைப் பற்றியும் அந்த நாட்டு மக்களைப் பற்றியும், செல்வமாய்க் கொழிக்கிற வளப்பத்தைப் பற்றியும், வசதிகளைப் பற்றியும் சென்றது. அந்த உற்சாகத்தில் திருவனந்தபுரம் வரும் வரையில் அவர்களுக்கு நேரம் போனதே தெரியவில்லை. (தொடரும்)

# பளிச்சிடும் மேன்மையைப் பாருங்கள் கண்ணார

# ஹிந்தாலியம்®

## உங்கள் இல்லத்திற்கு வழங்கும் நல்லொளி

வெள்ளியின் பளபளப்பு,
தோற்றத்திலே மதிப்பு,
எளிமையின் வனப்பு...
இதுதான் நீங்கள் பெறுவது,
ஹிந்தாலியம் பாத்திரங்களை
வாங்கும்போது.

ஹிந்தாலியம்
பாத்திரங்களிலே
சமைப்பதும் இன்பம்.
சாப்பிடுவதும்
இன்பம்.

ஹிந்துஸ்தான்
அலுமினியம்
கார்ப்பன் லிட்.




வெள்ளி
போல்
தோற்றம
ளிக்கிறது

எஃகு
போன்று
நீடித்து
ழைப்பது

ஹிந்தால்கோ விலை
ஸ்டெயின்லஸ் ஸ்டீல்
விலையில் மூன்றில்
ஒரு பாகம்தான்

Sobhagya HAC-370 TM

# போராட்டங்கள்




## 18. மனம் குழம்பியது

"யங் மென்ஸ் கிளப்'' வழக்கம்போல் கலகலப்பா யிருந்தது. காரை ஓரமாக நிறுத்தி விட்டு வந்த முரளி, வராந்தாவில் நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு பணக்காரர், தம்முடைய புதுக் காரைப் பலருக்குக் காட்டிப் பெருமைப் பட்டுக்கொண்டிருந்தார். பழைய காலத்துப் பணக்கார வீட்டுப் பெண், நகைகளை அணிந்து கொண்டு பரிதாபமாக நிற்பதுபோல், அந்தக் கார் நின்று கொண்டிருந்தது. காரின் முன்புறமும், பின்புறமும் மாட்டப்பட்டிருந்த 'எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்'குகளைப் பலர் சுற்றிச் சுற்றி வந்து வேடிக்கை பார்த்து வியந்து கொண்டிருந்தனர். காரின் சொந்தக்காரர் வேடிக்கை பார்ப்பவர்களை அலட்சியமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். எல்லாவற்றையும் வராந்தாவில் நின்று கொண்டிருந்த முரளி வேடிக்கை பார்த்தான். பிறகு, கூட்டமில்லாத இடத்தில் போய் ஒரு சோபாவில் சாய்ந்தான். மனச் சோர்வு, உடலில் அசதியைக் கொடுத்தது. சாய்ந்தவாறு கண்களை மூடிக் கொண்டான். பல எண்ணங்கள் அவன் மனத்தில் குடைந்து கொண்டிருந்தன.

'பாரதமணி'யின் எதிர்காலத்தைப் பற்றிய பிரச்னை அவன் முன்னால் நின்று பயமுறுத்திக் கொண்டிருந்தது. எப்படி இந்தச் சிக்கலில் இருந்து விடுபடுவது?

ஒன்றுமே புரியாமல் தவித்தான். பாங்கில் வாங்கிய கடனைத் தவணைப்படி திருப்பிக் கட்ட வேண்டியதைச் சென்ற மாதம் கட்டவில்லை. ஓர் அச்சு இயந்திரம் பழுதாகிவிடும் நிலையிலிருந்ததால், புது இயந்திரம் வாங்க முன் பணமும் கட்டியாகி விட்டது. இப்போது என்ன செய்வது...? தரம் வாய்ந்த ஒரு பத்திரிகை தானாகவே வலுவிழந்து, ஓய்ந்து, மடிந்து விடத்தான் வேண்டுமா? இதுதான் இந்நாட்டு மக்களின் விருப்பமா...?

முரளியின் மனம் உள்ளுக்குள்ளேயே அழுதது. பின்னாலிருந்து யாரோ தோளைத் தொடுவது போல் இருக்கவே கண்களைத் திறந்து திரும்பிப் பார்த்தான். அவனை உற்றுப் பார்த்துக் கொண்டு பைப்பை வாயில் கவ்விய படி பின்னால் நின்று கொண்டிருந்தார், ராஜரத்தினம். சிரிப்பை வலிய வரவழைத்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான் முரளி. பக்கத்துச் சோபாவில் அமர்ந்தார் அவர்.

''கன்கிராஜுலேஷன்ஸ், மிஸ்டர் முரளி......! ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பான உங்களுடைய அரசியல் கட்டுரைத் தொகுப்புப் புத்தகத்தை மிகவும் புகழ்ந்து நியூயார்க் பத்திரிகை எழுதியிருக்கிறது!'' என்றார் ராஜரத்தினம் உற்சாகத்துடன்.

''வெளிநாடு புகழ்ந்து என்ன செய்ய? தாய்நாடு என்னை ஆதரிக்கத் தயங்குகிறதே'' என்றான் முரளி சலிப்புடன்.

''மேதாவிகளுக்கு உள்ளூரில் மதிப்பு இருப்பதில்லை... உங்கள் பத்திரிகையின் விற்பனை குறைந்திருப்பதாகக் கேள்விப்பட்டேனே.... ஈஸ் இட்?'' என்று அக்கறையுடன் விசாரித்தார்.

''அதைப் பற்றிய கவலைதான் இப்போது'' என்றான் முரளி.

''ஓ... அதுதான் இப்படிச் சோர்ந்து போய் இருக்கிறீர்களா....? அதிக மாகப் பாதிக்கவில்லையே?''

''பாதிக்கும் போலிருக்கிறது.''

''அப்படியானால் என்ன திட்டம் போட்டிருக்கிறீர்கள்?''

''போட என்ன இருக்கிறது? நல்ல விஷயங்களுக்கே நம் நாட்டில் இடமில்லாமல் போய்விடுமோ என்னவோ?'' என்றான் முரளி, பயத்துடன்.

''மிஸ்டர் முரளி! இந்த மாதிரி கவலை இன்று உங்களை மட்டுமல்ல, தரமுள்ள விஷயங்களில் ஈடுபட்டிருப்பவர்கள் அத்தனை பேரையும் கவ்வியிருக்கிறது. சாஸ்திர பூர்வமான குரலில் அழுத்தம் இருந்ததே தவிர, மனத்தில் உற்சாகம் இல்லை.

''நோ.... நோ... எனக்கு நம்பிக்கை இல்லை. மற்ற நாடுகளிலும் இதே கதை தான். உலகம் முழுவதுமே பிடிவாதமாக இப்படியொரு பாதையில் போக முடிவு செய்து விட்டது. இந்தச் சமயத்தில்கூட நீங்கள் தைரியமாயிருந்து எதிர்த்து நிற்கிறீர்களே... அந்த விஷயத்தில் உங்களைப் பாராட்டுகிறேன்!'' என்றார் ராஜரத்தினம் உற்சாகமாக.

''ஆனால்... காலூன்றி நிற்கவே பலமில்லாமல் போய்விடும் நிலை வந்து விடும் போலிருக்கிறதே!'' என்றான் முரளி பரிதாபமாக.



# ர.சு.நல்லபெருமாள்

சங்கீதம், தரமான இலக்கியம், உள்ளத்தை உயர்த்தக்கூடிய கலைகள், கண்ணியமான அரசியல்—அனைத்துக்குமே இன்று கிராக்கி இல்லை. இன்று, நம் நாட்டு அரசியலிலும், சமூகத்திலும் விஷக் கிருமி பரவி வருகிறது. ஆபாச எழுத்துக்குத்தான் இன்று வரவேற்பு இருக்கிறது. சுதந்திரம் கிடைத்தது பெரிய விஷயமில்லை. சுதந்திர நாட்டின் தரம் எப்படி இருக்கிறது என்பது தான் மிகவும் முக்கியம்'' என்றார் ராஜரத்தினம், வெறுப்புடன்.

''இப்படியே இருந்து விடுமா? நிலைமை மாறலாம், தரம் கெட்ட உணர்விலிருந்து மக்கள் விழிப்படையலாம்'' என்றான் முரளி. அவனுடைய

''அயர்ந்து விடாதீர்கள். எப்போதுமே சைத்தானின் ஆரவாரந்தான் முதலில் பலமாயிருக்கும். நாளாவட்டத்தில் ஓய்ந்து விடும். 'பாரதமணி', இந்த நாட்டின் மனச்சாட்சி என்றல்லவா புகழடைந்திருக்கிறது. சலிப்படையாமல் பணியாற்றுங்கள். உங்களுடைய கார்ட்டூன்களையும் மக்கள் ரசனையோடு கவனிக்கிறார்கள்... ஆனால் 'காலைக்குரல்'வில் வெளியாகிற செய்திகளிலிருந்து உலகத்தின் யதார்த்த நிலை புரிகிறது....'' என்று கூறிவிட்டு

முரளியை உற்றுப் பார்த்தார் ராஜ ரத்தினம்.

முரளி, திகைப்புடன் அவரையே பார்த்தான். அவனுள்ளிருந்த சிறிது நம்பிக்கையும் குலைந்துவிடும் போல் இருந்தது.

''அப்படியானால், 'பாரதமணி'யிலும் அந்த மாதிரிச் செய்திகள் வர வேண்டும் என்கிறீர்களா?'' — முரளியின் கேள்வி பரிதாபமாக ஒலித்தது.

''நோ...நோ... டோன்ட் மிஸ்டேக் மீ.... உங்களைப் போடும்படி தூண்டவில்லை. ஆனால் அதைப் போடுவதற்கும் ஒரு பத்திரிகை இருந்து விட்டுப் போகட்டுமே!'' என்றார்.

''சமூகத்தின் சீரழிவைப் பூதக் கண்ணாடி கொண்டு காட்டித்தான் ஆக வேண்டுமா? ஒருசிலருடைய கேவலமான நடத்தைகளைப் பற்றிப் படிக்க வைத்து, மற்றவர்களும் அவ்விதம் நடப்பதற்குத் தெம்பளிக்க வேண்டுமா?''

''நான் அப்படிச் சொல்லவில்லை. சமூகத்தின் உண்மை சொரூபம் தெரிகிறது என்கிறேன். மிஸ்டர் முரளி, நம்முடைய பழைய கலாசாரத்தையும், பண்பாடுகளையும் பற்றி எவ்வளவோ பேசுகிறோம். ஆனால் நடைமுறையில் இன்று அதையெல்லாம் விட்டு விட்டு எவ்வளவு தூரம் நாம் விலகி வந்து நின்று கொண்டிருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ளக் 'காலைக் குரல்' போன்ற பத்திரிகைகள்தாம் ஓர் அளவு கோல்.''

''முடமான கை, எவ்வளவு தூரம் முடமாகியிருக்கிறது என்று அளந்து அளந்து பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா?'' என்று கேட்டான் முரளி.

''எப்படியெல்லாம் கிருமி பரவி, அழுகி, நாற்றம் எடுக்கிறது இந்தச் சமூகம் என்பதையாவது தெரிந்து கொள்ளலாமே?'' என்று கூறிச் சிரித்தார் ராஜரத்தினம்.

ஏற்கனவே நொந்து போயிருந்த முரளிக்கு ராஜரத்தினத்தின் பேச்சு இன்னும் வேதனையைக் கொடுத்தது. அவனுடைய பார்வையில் தோன்றிய வெறுப்பையும் வேதனையையும் உணர்ந்து கொண்ட ராஜரத்தினம் கூறினார்:

''மிஸ்டர் முரளி! நான் இந்த ஆபாசப் பத்திரிகையைப் புகழ்ந்து பேசுவதாக எண்ணி விடாதீர்கள். சமூகத்தின் யதார்த்த நிலையைப் புரிந்து கொள்ள அது உதவுகிறது என்று தான் சொல்லுகிறேன்.... சினிமாக்காரர்களும், 'ரியலிஸம்' என்ற போர்வையில் மட்டமாக எழுதும் எழுத்தாளர்களும், ஆதிமூலம் மாதிரி சினிமாக்காரிகளின் ஆபாசப் படங்களைப் போட்டுப் பத்திரிகை விற்பவர்களும் நம்முடைய கலாசாரத்தையும், பண்பாட்டையும் குழி தோண்டிப் புதைத்து, இளம் உள்ளங்களில் நஞ்சைப் புகுத்திவிட முடிவு செய்துவிட்ட பிறகு, இந்த நாட்டைத் தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும்'' என்றார் ராஜரத்தினம். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

பணியாள் சோடா பாட்டிலையும், கண்ணாடித் தம்ளரையும் ராஜரத்தினத்துக்கு முன்னால் பணிவுடன் வைத்து விட்டுச் சென்றான். கோட்டுப் பைக்குள்ளிருந்து ஒரு சிறு மதுப் புட்டியை எடுத்துத் திறந்து, மதுவைத் தம்ளரில் ஊற்றிக் கொண்டே முரளியைப் பார்த்துச் சிரித்தார். மதுவின் நெடி, முரளியின் மூக்கைத் துளைத்தது. முகத்தைச் சுளித்தான்.

''இரண்டு மாதங்களுக்கு முன்னால் 'பாரத மணி'யில் எழுதியிருந்தீர்களே, மனிதன் தெய்வத்தின் அம்சம் என்று. அதை நான் ஒப்புக் கொள்கிறேன்... ஆனால் மனிதனின் மனத்தில் சைத்தானுக்கு ஒரு பீடம் இருந்து தொலைக்கிறதே! அந்தச் சைத்தானுக்கு இரகசியமாகத் தீனி கொடுக்க வேண்டியிருக்கிறது. வெளியே தெய்வமாகவும், உள்ளே சைத்தானாகவும் வாழ்வது தவிர்க்க முடியாததாகி விடுகிறது!'' என்று கூறிக் கொண்டே மதுவைக் கொஞ்சம் அருந்தி விட்டுத் தம்ளரை மேஜையின் மீது வைத்தார் அவர்.

வியப்பும் வெறுப்புமாக ராஜரத்தினத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான் முரளி. அந்தச் சமயத்தில் அடுத்த அறையிலிருந்த ரேடியோவில் செய்தி வாசிப்பது கேட்டது.

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள், ஓர் ஆலையில் தொழிலாளிகளின் வேலை நிறுத்தத்தைத் தூண்டுவதாகவும், அடுத்த மாதம் பத்தாம் தேதி நிச்சயம் வேலைநிறுத்தம் நடக்கும் என்றும், செய்தி வாசிக்கப்பட்டது. விவசாயிகளை அறுவடைக்குச் செல்லாமலிருக்கும்படி கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் கேட்டுக் கொண்டிருப்பதாகவும் செய்தி கூறியது.

அதைக் கேட்டு விட்டு ராஜரத்தினம் வெறுப்புடன் முகத்தைச் சுளித்தார்.

''மிஸ்டர் முரளி! சுதந்திரம் கிடைத்த மகிழ்ச்சிப் போதையில் நாம் எவ்வளவோ தவறுகளைச் செய்துவிட்டோம். நிதானமாகச் சிந்தித்துச் செயல்படும் சூழ்நிலை நமக்கில்லை. 'ஹீரோ ஒர்ஷிப்' நம்முடைய சாபக்கேடு. நம்முடைய தலைவர்கள் என்ன செய்தாலும்

# சோஷலிசம் (சமூகநலன்) அங்கும் இங்கும்!

ஜான் வெராரட் என்பவருக்குப் பித்தப் பை ஆபரேஷன் நடந்தது. சஸ்திர சிகிச்சையில் பயன் படும் ஓர் இடுக்கியை வயிற்றிலிருந்து நீக்க டாக்டர் மறந்துவிட்டார். அது வயிற்றுக்குள்ளேயே இருந்து தொல்லை கொடுத்தது. எக்ஸ்ரேயில் விஷயம் தெரிய வந்ததும் மறுபடியும் ஆபரேஷன் நடந்தது. இடுக்கியை நீக்க. நோயாளி வழக்குத் தொடுத்தார். நஷ்டஈடாக 12,500 டாலர் (கிட்டத் தட்ட ஒரு லட்சம் ரூபாய்) கிடைத்தது.

இப்படி டாக்டர்களின் கவனக் குறைவு காரண மாக அமெரிக்காவில் நோயாளிகள் அடைந்த நஷ்டஈடுகளுக்கு ஒரு நீண்ட பட்டியல் தருகிறது நவம்பர் 2ந் தேதி 'டைம்' வார இதழ். நஷ்ட ஈடுகள் (டாலர் கணக்கில்) 40,000; 60,000; 887,500; 1,500,000 என்ற ரீதியில் இருக்கின்றன.

இதைப் படித்த கையோடு ஒத்து 12-11-70 நாளிதழில் வெளியான ஒரு செய்தியையும் படிக்க நேருகிறது.

ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த கல்யாணமாகாத பதினைறு வயதுச் சிறுவனுக்குக் கட்டாயமாகக் கருத் தடை ஆபரேஷன் செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது.

கருத்தடை ஆபரேஷனுக்கு வழக்கமாகத் தரப் படும் சன்மானத் தொகையும் அவனுக்குக் கிடைக்க வில்லையாம். இவனை ஏமாற்றி ஆபரேஷனுக்கு அழைத்துப் போனவர்கள் ஐந்து ரூபாய் மட்டுமே கொடுத்து வஞ்சித்து விட்டார்களாம். இவனுடைய தந்தை மைந்தனின் எதிர்காலம் பாழாகிவிட்டதாக மந்திரியிடமும் அதிகாரிகளிடமும் முறையிட்டுக் கொண்டிருக்கிறார்!



சரிதான் என்று மக்கள் முடங்கிவிட்ட நிலை இப்போது. சில தலைவர்களுக்கு ரஷ்யப் புரட்சியில் மோகம் உண்டு. அந்தக் கனவு உலகத்திலேயே சஞ்சரித் துக் கொண்டிருப்பவர்களுக்கு உலகப் போக்கின் யதார்த்த நிலையை உணரும் வாய்ப்பில்லை. தெரிந்தோ, தெரியா மலோ ஆக்கிவிட்ட சட்டங்கள், நாட் டுக்குத் தீமையை விளைவித்துக் கொண் டிருக்கின்றன. இதிலிருந்து மீள்வது என்பது இந்தச் சூழ்நிலையில் முடியாத காரியம்.''

''வேலைநிறுத்தம் செய்வதை உரிமை யாக்கிவிட்ட பிறகு, அந்த உரிமையை இனி பறிக்கவும் முடியாதே'' என்றான் முரளி.

''உரிமை என்றால் என்ன? இதைப் பற்றிய விளக்கத்தைப் பூரணமாக உணராததால்தான் இப்படிச் சிரழிய வேண்டியிருக்கிறது. கடமையைச் செய்வதற்கு ஒருவனுக்குள்ள சுதந் திரத்துக்குத்தான் உரிமை என்று பெயர். இதை இந்த நாட்டில் உரிமை பற்றிப் பேசும் எந்தக் கட்சியைச் சேர்ந்த தொழிலாளர் தலைவரும் உணர்ந்ததாகத் தெரியவில்லையே......? ஏமாற்றாமல் சரியாக வேலை செய் கிறார்களா என்று வீட்டில் உள்ள வேலைக் காரன் முதல், பெரிய மில் தொழி லாளி வரை எல்லோரையும் மேற் பார்வை பண்ணி வேலை வாங்க வேண்டி யிருக்கிறது. இப்படிக் கண்காணித்து வேலை வாங்கும் நிலை மாறி, ஒவ்வொருவ னும் தன்னுடைய வேலையைப் பொறுப் புடன் கண்காணிப்பும், தூண்டுதலும் இல்லாமல் செய்து முடிக்கும் நிலை எப்போது வருகிறதோ, அப்போதுதான் இந்த நாடு உருப்படும். அது வரைக் கும் இந்த நாட்டுக்குச் சுபிட்சம் கிடை யாது..... நெவர்... நெவர்....'' என் றார் ராஜரத்தினம் கோபத்துடன்.

''அப்படிப் பொறுப்புள்ளவர்களாக மாற மாட்டார்கள் என்கிறீர்களா?'' என்று முரளி கேட்டான்.

''எனக்கு நம்பிக்கை இல்லை.... இப்போதுள்ள லேபர் ஆகட்டும், ஃபாக்டரி ஆகட்டும், அரசியல்வாதி களின் பேராசையும் இருக்கும் வரை அப்படி மாற வாய்ப்பே இல்லை.''

'''பெஸிமிஸ்டாக' இருக்கிறீர் களே!'' என்றான் முரளி.

''இன்றையச் சூழ்நிலை எல்லாரை யும் 'பெஸிமிஸ்டா'கத்தான் ஆக்கிக் கொண்டிருக்கிறது. அரசியல்வாதிகள் வோட்டைப் பற்றிய கவலையை விட்டு நாட்டைப் பற்றிய அக்கறையில் என்று ஈடுபடுகிறார்களோ அன்றுதான் விமோசனம் உண்டு....''










கால்நடைகளுக்கும் நவீன கொட்டில்கள் தேவை

# சங்கர் சிமெண்ட்




பாறை போன்று உறுதி நிலைத்திருக்கக் கூடியது
ISI மார்க்குடன் உத்தரவாதம் உள்ளது




இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட், தன் பில்டிங், சென்னை-2

23 ஆண்டுகள் நிலைத்து — இன்னும் வளர்ந்துகொண்டே போகிறது!

இலவச தொழில் நுட்ப ஆலோசனைக்கு: சிமெண்ட் சர்வீஸ் பீரோ, 'குரோவ்', சென்னை-18

''வருங்காலத்தைப் பற்றி எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்றான் முரளி, அழுத்தமாக. அவனை ராஜரத்தினம் உற்றுப் பார்த்தார்.

''ஓ...! 'காலைக் குரல்' பத்திரிகையின் விற்பனை 'பாரதமணி'யை விழுங்கி விடுவது போலிருக்கும் இந்த வேளையி லும் உங்களுக்கு இந்த மக்கள் மீது நம் பிக்கை இருக்கிறதா...?'' என்று வியப் புடன் கேட்டார்.

''நிச்சயமாக....'' என்றான் முரளி.

''அப்படியானால் நான் உங்களை மனதாரப் பாராட்டுகிறேன்... ஆனால் ஒரு விஷயம் மிஸ்டர் முரளி... எதி லுமே அளவு மீறி நம்பிக்கை வைத்து விடாதீர்கள். அதுவும் மனிதக் கூட்டத் தின் மீது நம்பிக்கை வைத்தால், கடைசி யில் ஏமாற வேண்டியிருக்கும்'' என்று கூறிக் கொண்டே எழுந்தார் ராஜ ரத்தினம்.

அவர் விடைபெற்றுச் சென்ற பிறகும் சிறிது நேரம் அந்த இடத்தி லேயே சோபாவில் உட்கார்ந்திருந்தான் முரளி.

ராஜரத்தினத்தின் சிந்தனையும், பேச்சும் முரளியைக் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டன. அவரது அழுத்தமான பேச்சை நினைவில் கொண்டு வந்து சிந்தித்தான். சிந்திக்கச் சிந்திக்கக் குழப் பம்தான் மிஞ்சியதே தவிர, தெளிவு ஏற்படவில்லை.

யார் எக்கேடு கெட்டால் என்ன? பண்பாடு என்னும் கொள்கையைச் சுமந்து நான் ஏன் ஓய்ந்து போக வேண் டும்? 'காலைக் குரல்' இன்று மக்க ளிடையே எவ்வளவு செல்வாக்கைப் பெற்று விட்டது....! 'பாரத மணி' யின் தரம் குறையாமல் பார்ப்பதால் யாருக்கு லாபம்? மக்கள் தரத்தை விரும்பவில்லை யென்றால்.... நாம் கிடந்து அவதிப்படுவானேன்?

சிந்தனை குழம்பியது. சோபாவை விட்டு எழுந்தான் முரளி.

'பாரதமணி'க் காரியாலயத்தை அவன் கார் அடைந்த போது, 'பாரத மணி' என்று சிவப்பு நிற நியான் விளக் கில் எழுதப்பட்டிருந்த எழுத்துக்கள் அவ னைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தன.

'' 'பாரத மணி'க்கு ஒரு கொள்கை உண்டு. தரம் உண்டு. இவற்றை ஏலம் விட யாருக்கும் உரிமை கிடையாது'' என்று அந்த விளக்கு கோபத்துடன் இரத்த வெறி கொண்டு உறுமுவது போலிருந்தது. அந்த நியான் எழுத்துக் களையே சிறிது நேரம் உற்றுப் பார்த் தான். அவனுள் குமைந்து கொண்

# உரக்கப் பேசும் டெலிபோன்

டெலிபோன் மணி அடித்தால் ஒரு பொத்தானை அழுத்தினால் போதும். ரிஸீவரையே கையில் தூக்க வேண்டாம். டெலிபோன் மூலம் வரும் தகவலைத் தெளிவாகக் கேட்கலாம். சென்னையில் உள்ள தமிழ்நாடு புதுமை காண்போர் கழகம் ('The Tamilnad Inventors' Association) டெலிபோன் வைத்திருப்பவர்களுக்காக இப்படி ஒரு புதுமையான அமைப்பைத் தயாரித்திருக்கிறது. நாமாகப் பேச வேண்டுமானால் ஒரு பொத்தானை அழுத்தி டயல் செய்தால் மட்டும் போதும். கூப்பிட்டவரின் குரலை ரேடியோப் பெட்டியில் கேட்பதுபோல் கேட்கலாம். பதில் கூறலாம். பேசி முடித்ததும் பொத்தானைத் தட்டினால் தொடர்பு துண்டிக்கப்படும். பேசிக் கொண்டிருக்கும்போது முன்னால் ஒரு சிறு விளக்கும் தெரியும். தொடர்பு துண்டிக்கப்படும்போது விளக்கும் அணைந்துவிடும். இந்த அமைப்பின் மூலம் மறு முனையில் பேசுபவரின் குரலைப் பெரிதுபடுத்திக் கொள்ளவும் வசதியுள்ளது. தொலை பேசியை எவ்வகையிலும் பாதிக்காமல், அதில் இயங்கும் மின் அலைகளைக் கொண்டே ஒலிப் பெருக்கம் செய்து கொடுக்கிறது இக் கருவி. இதற்கு டிரான்ஸிஸ்டர்களின் இணைப்பும் உதவுகிறது.

மேஜை டெலிபோனுக்கு இப்படி ஒரு 'மண்ட பம்' கட்டியிருப்பவர்கள் திரு பி. கருணாகரனும் திரு பி. சூரியநாராயணனுமாவார்கள்.

'டெலிபோனை எடுத்துப் பேச முடியாத அளவுக்கு அத்தனை சோம்பேறித்தனமா, அதற்கு ஒரு கண்டு பிடிப்பா?' என்றால் உடற் பிரயாசையைத் தவிர்ப்பது மட்டும் இதன் குறிக் கோளல்ல. அந்த நேரத்தில் கைகள் டெலிபோனோடு கட் டுப்படா திருப்பதால் வேறு வேலைகளையும் செய்யலாம். டெலி போனில் பேசிய படியே ஒரு பைலைப் புரட்டிப் பார்த்துத் தகவல் கொடுப்பதோ அல்லது மறு பக்கத் தில் அவர் கூறு வதை இங்கு நாம் எழுதிக் கொள்வதோ எளிதாகிறதல்லவா?

டிருந்த குழப்பம் மறைந்து மனத்தில் தெம்பு ஏற்பட்டது. காரியாலயத்துக்குள் எல்லாரும் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

இரவு அச்சாக வேண்டிய முக்கியமான செய்திகளைப் பற்றி விசாரித்தான் முரளி.

''காளிநாதன் மில்லில் வேலை பார்க்கும் வேலாயுதத்தைக் கண்டு பேசினேன்.... நீங்கள் அவனுக்கு அந்த மில்லில் வேலை வாங்கிக் கொடுத்தீர்களே!'' என்றான் சாமிநாதன்.

''ஓ....! அவனா? அங்கு அவனை வேலைக்குச் சேர்ப்பதற்குள் நான் பட்ட பாடு... அன்று மட்டும் மில் முதலாளி, அவனுக்கு வேலை கொடுக்கவில்லையென்றால், அவன் குடும்பமே பட்டினியால் செத்திருக்கும்.... இப்போது நன்றி கெட்டு....''

''சார்!... சார்! அவன் அப்படி இல்லை சார். வேலைநிறுத்தத்தில் அவனுக்கு இஷ்டம் இல்லையாம். யாருக்குமே இஷ்டம் இல்லையாம்... தொழிலாளர் சங்கத் தலைவர் தாம் கட்டாயப் படுத்துகிறாராம்.''

''கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த நல்லதம்பிதானே அந்த மில் தொழிலாளர் சங்கத் தலைவன்?''

''அவன்தான் சார்.... அவனுக்கும் அவனுடைய கூட்டாளிகளுக்கும் பயந்துதான் எல்லோரும் வேலை நிறுத்தம் செய்ய வேண்டியிருக்கிறதாம். வேலை நிறுத்தத்துக்கு நோட்டீசும் கொடுத்தாகி விட்டதாம்.''

''மூலகாரணம் என்னவாம்?''

''ஒரு தொழிலாளியை வேலையிலிருந்து நீக்கினார்களாம். அதை எதிர்த்துத்தான் இந்த வேலைநிறுத்தம்.''

''நீக்கியதற்குக் காரணம்?''

''அந்த ஆள் ஏற்கனவே வேலையைச் சரிவரச் செய்வதில்லையாம். மில் ஸ்டோரிலிருந்து இரண்டு பேல் நூல்களைத் திருடி விட்டாராம். அதைப் பற்றி விசாரிக்கப் போன ஸ்டோர் மானேஜரிடம் மரியாதைக் குறைவாகப் பேசி, அவரை அடித்தும் விட்டாராம். அதனால்தான் டிஸ்மிஸ் செய்து விட்டார்கள்.''

''சங்கத்தின் டிமாண்ட் என்ன?''

''அந்தத் தொழிலாளியைத் திரும்ப எடுக்க வேண்டுமாம்.... நேற்று தொழிலாளர்களில் யாரோ ஒருவர், வேலை நிறுத்தம் வேண்டாம்; திருடிய தொழிலாளியைத் திரும்ப வேலைக்கு எடுப்பது நியாயம் இல்லை என்றாராம். அவரைச் சாயங்காலம் வேறு சில தொழிலாளர்கள் அடித்துத் தெருவில் போட்டு விட்டு ஓடி விட்டார்களாம்.''

''இந்தச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம்.... இது எப்படி 'டெவலப்' ஆகிறது என்று பார்த்துக் கொண்டு பிறகு செய்திகளைப் போடலாம்.... வேறு ஏதாவது செய்தி உண்டா?''

''பேராசிரியரிடமிருந்து போன் வந்தது. நீங்கள் வந்ததும் பேசச் சொன்னார். உடனே அவரைச் சந்திக்க வேண்டுமாம்'' என்றான் சாமிநாதன்.

முரளி அவசரமாகப் போனை எடுத்துப் பேராசிரியருடன் பேசினான்.

''உனக்காகத்தான் காத்திருக்கிறேன் முரளி... உடனே வா.. ப்ளீஸ்!'' என்றார் கமலசாமி படபடப்புடன். அவருடைய குரலில் ஒலித்த கலக்கமும், பயமும் முரளியைத் திகைக்க வைத்தன. ஏதோ ஒன்று நடந்திருக்கிறது என்பதை உணர்ந்து கொண்ட முரளி போனைக் கீழே வைத்து விட்டு, பாய்ந்து மாடிப் படிகளில் இறங்கிக் காரை நோக்கி ஓடினான்.

முரளியின் ஓட்டத்தைக் கண்டு திகைத்துப் போய் நின்றான் சாமிநாதன்.

பேராசிரியர் கமலசாமியின் வீட்டுப் போர்டிகோவில் காரை நிறுத்திவிட்டுப் படிகளில் விரைந்து ஏறினான் முரளி. வராந்தாவை அவன் நெருங்குவதற்குள் பேராசிரியர், மிகுந்த பரபரப்புடன் வீட்டுக்குள்ளிருந்து வெளியே விரைந்து வந்தார். அவருடைய தோற்றத்தைக் கண்டதும் முரளி, திகைத்துப் போய் அவரையே வெறிக்கப் பார்த்தான். பேராசிரியரின் முகம் வெளிறிப் போயிருந்தது. கண்களில் பயத்தின் சாயல் இருந்தது. உடல் சிறிது நடுங்கிக் கொண்டிருந்தது. மிகுந்த கலவரத்துடன் முரளியை நெருங்கிய கமலசாமி, பேச முடியாமல் திணறினார். பரக்கப் பரக்க விழித்தார். பிறகு கையில் வைத்திருந்த ஒரு கடிதத்தை முரளியிடம் கொடுத்துவிட்டு, நிற்கக்கூட வலுவிழந்தவராய் வராந்தாவில் கிடந்த சோபாவில் பொத்தென்று விழுந்தார். ஒன்றும் புரியாதவனாய்த் திகைப்புடன் கடிதத்தை வாங்கிய முரளி, சுவரில் மாட்டப்பட்டிருந்த மின்சார விளக்கின் அடியில் சென்று கடிதத்தைப் படிக்க முனைந்தான். கடிதத்திலிருந்த எழுத்தைக் கண்டதுமே அதைச் சாரதா எழுதியிருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டான். அவனுள் பரபரப்புத் தோன்றியது. இனம் புரியாத பயமும், குழப்பமும் அழுத்தின. ஒரு முறை திரும்பிப் பேராசிரியரைப் பார்த்தான். அவர் வலுவிழந்து, சோபாவில் சாய்ந்து கிடந்தார். (தொடரும்)

# விஜிபி

## பால் உருவாக்கப்பட்ட தவணைத் திட்டம் ஏராளமான மக்களுக்கு உதவுகிறது.

RALEIGH
murphy
Hercules
RIVEX
SEVAK
SMITH ROSS
TIMESTAR
Dunlopillo
Sumeet
Godrej
HMV
Ralliflon
CAMY
FAVRE-LEUBA GENEVE

மேலும் மேலும் அதிகமான மக்கள்
விஜிபியின் சுலபத் தவணைத் திட்டத்தால் பயனடைகிறார்கள்

எல்லோரும் சுலபமாகப் பொருள்கள் வாங்கும் வாய்ப்பு. தயாரிப்பாளர்களின் விலைக்கே தரும் தனிச்சிறப்பு. வசதிக்கேற்றபடி பணம் செலுத்தும் முறை. தேர்ந்தெடுத்து வாங்க ஏராளமான பொருள்கள். உத்திரவாதமுள்ள தரமான பொருள்கள். விற்பனைக்குப் பிறகும் திருப்திவளிக்கும் சேவை.

இத்தனைக்கும் மேலாக வாடிக்கையாளர் பெறும் மன நிறைவு.



VGP

**வி.ஜி. பன்னீர்தாஸ் & கோ.**
சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 442333
கிளை : தி.நகர், சென்னை-17. போன் : 440246
புதிய ஷோ-ரூம் :
27, ரத்தன் பஜார், மதராஸ்-3. போன்: 33214

NAS-122A

இரண்டு லட்சத்துக்கு மேலான மக்களுக்கு சேவை புரியும் தனிச் சிறப்பு.

**1926க் வருஷம் பிறந்த திரு ஸுக்பீர் பஞ்சாபியைத் தாய் மொழியாகக் கொண்ட எம். ஏ. பட்டதாரி. ஆரம்பத்தில் பேராசிரியராகப் பணியாற்றத் தொடங்கிய இவர் இப்பொழுது எழுத்திலேயே முழு நேரமும் செலவிடுகிறார். ஹிந்தி, பஞ்சாபி இரு மொழிகளிலும் கதைகளும், நாவல்களும், கவிதைகளும் எழுதிப் புகழ்பெற்றவர். இவரது 'ராத் கா சேஹ்ரா' என்னும் நாவல் ஹிந்தி, பஞ்சாபி மொழிகளில் வெளியாகிச் சலசலப்பை ஏற்படுத்தி யிருக்கிறது. தற்சமயம் டால்ஸ்டாயின் 'போரும் அமைதி'யும் நாவலைத் தமது மொழியில் மொழிபெயர்த்து வருகிறார். பூவின் மனத்தையும் பூவையின் மனத்தையும் இவர் படம் பிடித்துக் காட்டும் அழகைக் கண்டு சொக்காதவர் இருக்க முடியுமா?**

# மலர்ச் சரங்கள்

.ஸூக்பீர்.




ஸ்வதேஷ் அலுவலக நேரம் முடிந்ததும் புறப்பட்டான்.

வெளியே அவசரம் அவசரமாகப் போகும் எண்ணற்ற ஜனங்கள்! பெரிய பெரிய கட்டிடங்கள்! நிறம் மங்கிய மாலை நேரம்! மண்நிறம் கொண்ட வானம். நன்கு இழுத்துக் கட்டப்பட்ட கூடாரம் போல!

பார்த்துக் கொண்டே சென்றவனுக்கு, அன்றைய மாலைப் பொழுதை எப்படிக் கழிப்பது என்ற பிரச்னை தோன்றியது.

அலுவலகம் விட்டுப் புறப்பட்டால் ஸ்வதேஷுக்கு வீட்டுக்குப் போக வேண்டுமென்ற அவசரமோ துடிப்போ தோன்றுவதே இல்லை. ஆம். வீடு அவனைக் கவரவில்லை. வீட்டை நினைத்தாலே கசந்தது. அந்தக் கசப்பு நாவை மட்டும் இல்லை, மனத்தின் அடித்தளம்வரை சென்று குமட்டியது.

அவனுடைய திருமண வாழ்வு இன்பம் பயப்பதாக அமையாததே காரணம்.

வெகு நாட்களாகவே அவனுக்கும் அவன் மனைவிக்கும் இடையே ஸௌஜன்யமே கிடையாது. அவனுடைய மனைவி அவனுடன் வீணையும் நாதமும்போல இழைந்திருக்கவில்லை; கருத்து சேர்ந்தும் வாழவில்லை; சின்னஞ்சிறு விஷயங்களுக்கெல்லாம் பெரும் போர் தொடுத்து வந்தாள். சொர்க்கமாகத் திகழ வேண்டிய குடும்பத்தை நரகமாக்கி வந்தாள்.

பலன், இருவரும் தனித் தனியே பொருமுவது, உறுமுவது, காய்வது, நோவது என்று ஆகிவிட்டது!

இதற்கு என்ன பரிகாரம் செய்வது என்று ஸ்வதேஷுக்கு விளங்கவில்லை.

பார்ப்பதற்கு மனைவியின் முகம் எப்படி அறியாக் குழந்தை போலிருந்தது! நினைத்துப் பார்க்கப் பார்க்க அவனுக்கு வியப்பாயிருந்தது! அப்படிப்பட்டவளுடைய நாக்கு நல்ல எஃகினால் ஆன கத்தரிக்கோலையும் அல்லவா மிஞ்சிவிட்டது! மனத்துக்குள்ளே இப்படியா நஞ்சு தோய்ந்திருக்க வேண்டும்? நேரம் கிடைக்கும்போதெல்லாம் தேளாகக் கொட்டவா வேண்டும்? அவள் ஒரு சந்தேகப் பிராணி! சின்னச் சின்ன விஷயங்களுக்குக் கூடச் சந்தேகம்! எடுத்ததற்கெல்லாம் ஐயப்பாடு, குறைபாடு! புகார்! பிறரை நம்ப அவள் கற்கவே யில்லை. அவள் எரிந்து விழுந்து பேசும்போது அவள் முகத்தில் தோன்றும் அந்த வெறுப்பின் தழும்

# பஞ்சாபி

அட்டைப்படக் கதை

பொசுங்கிப் பொடியாகிப் போகும். அப்பொழுது அவள் முகம் முழுவதும் குத்தும் முட் புதராகத் தோற்றம் தரும். உதடுகளோ நல்ல தேனுக்குப் பதில் கொடிய நஞ்சைத் தேக்கி நிற்கும்.

ஸ்வதேஷுக்கு இத்தகைய எட்டிக் கசப்பு வாய்ந்த வாழ்க்கையிலிருந்து தப்பி வாழ ஒரே ஒரு வழிதான் தோன்றியது. எத்தனை முடியுமோ, அத்தனை நேரம் வெளியிலேயே தங்கி விடுவதுதான் அவன் அநுபவத்தால் ஆய்ந்து கண்ட வழி. எனவே, விடியற்காலையில் வீட்டை விட்டுப் புறப்பட்டான். இருட்டி எட்டு நாழிகை ஆன பின்னரே வீடு திரும்புவான். வீடு திரும்பியதும் ஆறி அவலான சோறும், மனைவியின் காரசாரமான பேச்சும் தான் அறு சுவை உணவாக அவனுக்குக் கிடைக்கும். அவ்வளவையும் கேட்டுக் கொண்டு இடித்த புளி யாக மௌனம் சாதிப்பான். அப்புறம் அலுத்துச் சலித்துக் களைத்துப் போய்ப் படுக்கையில் விழுவான். அப்படியும் பல சமயம் தூக்கம் வராது. இரவு வெகு நேரம் வரை கனவு — உறக்கத்தில் மூன் எடுக்க என்ன வழி என்று சிந்திப்பான். சிந்தனை சிந்தனையாக இருக்குமே ஒழிய வழி புலப்படாது.

அன்று ஸ்வதேஷ் சாலையில் போய்க் கொண்டிருந்த பொழுது யோசித்தான்: ''இன்று நண்பர்கள் யாரும் கிடைக்காவிட்டால் இன்றைய மாலைப் பொழுது எப்படிப் போகும்? இப்பாதையில் தன்னந் தனியாக நடந்தால், தனிமை கடிக்க அல்லவா வரும்?''



**''இரண்டணுவுக்கு ஒரு வேணி! வேணுமா சாமி?''**

பெண்குரல் ஒன்று பின் தொடர்ந்தது. அதைக் கேட்டு ஸ்வதேஷுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. 'அது ஒன்றுதான் குறைச்சல்!' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

அப்படியும் அந்தக் குரல் அவனைத் தாண்டிச் செல்லவில்லை. திரும்ப ஒலித்தது. வேறு வழியின்றித் தலையைத் திருப்பிப் பார்த்தான். ஒரு பெண் அழகாகத் தொடுக்கப்பட்ட எழெட்டு மலர் வேணிகளைக் கையில் ஏந்தி நின்று கொண்டிருந்தாள். இரக்கம் வருவிக்கும் குரலில் அவனைப் பார்த்து வேணி வாங்குமாறு தூண்டினாள்.

ஸ்வதேஷ் கடும் குரலில், **''வேண்டாம். இதை நான் யாருக்காக வாங்குவது?''** என்று கேட்டான்.

பெண்ணுக்குக் கொஞ்சம் நம்பிக்கை துளிர்த்தது. ''யாருக்காகவேனும் சரி, ஒன்று வாங்கிக்கொள், சாமி! இந்த நேரம் வரை ஒன்றுகூட விலை போகவில்லை. உன் கையாலே 'போணி' ஆனதாக இருக்கட்டும்!'' என்றாள்.

ஸ்வதேஷ் ஒரு பார்வை அந்த வேணிகளின் மீது ஓட்டினான். பிறகு கனத்த இமைகளைத் தூக்கி அந்தப் பெண்ணைப் பார்த்தான். அழுக்கேறிய அவலமான முகம் என்றாலும் சுட்டும் விழிச் சுடர்! கோதுமை நிறம்!

பெண் அவனையே நாணம் பொங்கப் பார்த்துக் கொண்டு நின்றாள். அவன் இமையைத் தாழ்த்திக் கொண்டான்.

''சரி, கொண்டு வா! ஒன்று கொடு!'' ஸ்வதேஷ் மலர் வேணிகளைப் பார்த்துக் கொண்டே சொன்னான்.

பெண் ஒரு மலர் வேணியை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

ஸ்வதேஷ் பையிலிருந்து ஒரு நாலணாவை எடுத்து அவளிடம் கொடுத்தான்.

''சில்லறைக் காசு இல்லையே, சாமி! இது தான் முதல் போணி!'' என்றாள் பெண்.

ஸ்வதேஷ் சட்டைப் பையில் கையை விட்டுத் துழாவினான். ஒரு நாலணாவும் ஓரணாவும் வந்தன.

பெண் அதைக் கண்டு சிந்திக்கலானாள், அவன் வேணியைத் திருப்பிவிடுவானோ என்று.

அதே நேரத்தில் ஸ்வதேஷ், ''இன்னொன்று கொடுத்துவிடு. நாலணா சரியாகி விடும்!'' என்றான்.

பெண் மலர்ந்து அவனிடம் இன்னொரு வேணியையும் கொடுத்தாள்.

அவள் அங்கிருந்து நகர ஆரம்பித்ததும், ஸ்வதேஷ், ''இதோ பார்! சற்று நில்!'' என்றான். பெண் அருகுக்குற்று நின்றாள்.

''இரண்டை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? நீ ஒன்றை எடுத்துக்கொள். உன் தலையில் சூடிக்கொள்!'' என்றவன் இலேசாக நகைத்தவாறே அவளிடம் ஒரு வேணியை நீட்டினான்.

பெண்ணின் முகம் சிவந்தது. அவள் உடல் அழுக்கு அவ்வளவும் இறங்கி விட்டாற்போல இருந்தது. ஸ்வதேஷுக்கு அவள் விழிகள் கருவண்டை நினைவு படுத்தின. இளைகள் [illegible] பருவத்துக்கும் இளமைப் பருவத்துக்கும் இடைகழியில் இத்தனை நேரமும் நின்று கொண்டிருந்த பெண், கன்களாம் பார்த்துக் கொண்டிருக்கும்போதே எப்படிப் படி தாண்டினாள் என்று வியந்தான் ஸ்வதேஷ். அந்த வியப்பில் அவன் விழிகளும் விரிந்தன.

சட்டென்று அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டான். பிறகு இலேசாக இளநகை புரிந்து, ''இந்தா, எடுத்துக்கொள்! நான் சும்மாச் சொன்னேன். கொண்டையில் சூடிக் கொள்ள உனக்கு விருப்பமில்லையென்றாலும் இன்னொரு நாள் எனக்குக் கொடேன். இல்லை, சில்லறைக் காசு கிடைத்து விட்டால் இரண்டணாவைத் திருப்பிக் கொடேன்!'' என்றான்.

பெண் மெதுவாக வேணியை வாங்கிக் கொண்டாள். பிறகு மெதுவாக அடி மேல் அடி எடுத்து வைத்து அவ்விடம் விட்டு நகர்ந்தாள். ஸ்வதேஷ் அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவள் மறைந்ததும், அவன் மனம் நிலை கொள்ளவில்லை. எனவே, வீட்டை நோக்கி நடக்கலானான்.

அவன் வீட்டுக்குச் சென்றபோது அவன் மனைவி சமையல் அறையில் இருந்தாள். அவள் இரும்பு வாணலியில் ஏதோ வதக்கிக் கொண்டிருந்தாள். சட்டுவம் சுழற்றும் சத்தம் வீடு முழுவதும் எதிரொலித்துக் காதைத் துளைத்துக்கொண்டிருந்தது.

ஸ்வதேஷ் பேசாமல் தன் அறைக்குள் சென்றான். உடை மாற்றிக் கொள்ளும் பொழுது பாண்டின் பையில் போட்டுக்கொண்டிருந்த வேணியின் நினைவு வந்தது. அப்படியே பையிலேயே இருந்து விட்டுப் போகட்டுமே என்று ஒரு முறை எண்ணினான். ஆனால்... கூடாது. மனைவி பார்த்துவிட்டாளானால் என்ன நினைப்பாள்? யாருக்குக் கொடுக்க வாங்கியதோ என்று எண்ணினால்? ஆயிரம் ஆயிரம் ஐயங்கள் எழுமே அவளுக்கு! அதனால் பையிலிருந்து எடுத்து எங்கேயாவது வைத்து விடுவதுதான் நல்லது...

ஸ்வதேஷின் காலடி ஓசை கேட்டதுமே அவன் மனைவி எழுந்து நின்றாள், ஒரு மூச்சு சண்டை பிடிக்க. ''அவள் அவனை என்னவென்று எண்ணிக் கொண்டிருக்கிறான்? கட்டின பெண்டாட்டி என்றா? அல்லது விலைக்கு வாங்கி வந்த...''

அடுப்பில் வாணலியையும் சட்டுவத்தையும் அப்படியே விட்டுவிட்டு அடுத்த அறைக்கு வந்தாள். ஸ்வதேஷின் கையில் மலர்வேணியைக் கண்டவள் அப்படியே அயர்ந்து நின்று விட்டாள்.

ஸ்வதேஷ் திடுதிடுப்பென்று அவளைத் தன் எதிரே கண்டவன் சமாளிக்க முடியாமல் திணறிப் போனான். மலர் வேணி இருந்த கையை நீட்டி, 'இந்த வேணியை... இந்த வேணியை... சும்மாத்தான் வாங்கி வந்தேன்...'' என்று சொல்ல முடியாமல் சொல்லித் திணறினான்.

அவன் மனைவி முன்னே வந்து அவனிடமிருந்து அந்த வேணியை வாங்கிக் கொண்டாள். ஒரு முறை மோந்து பார்த்தாள்; மறு முறையும் வாசனையை நுகர்ந்தாள். அடுத்த [illegible]

தன் முடியில் சூட்டிக் கொள்வதில் முனைந்தாள்.

ஸ்வதேஷ் இதற்குள் தன் நிலைக்கு வந்திருந்தான். அவள் மலர் சூடிக் கொள்வதை இமை கொட்டாமல் பார்க்கலானான்.

அவள் திரும்பினாள். அவள் முகம் ஸ்வதேஷுக்குக் கவிதையொன்றைக் காட்டி நின்றது.

''நல்ல வாசனை! அறையே எப்படிக் கம கமக்கிறது! புத்தம் புது மலர் கொண்டு கட்டப்பட்ட வேணி என்று தோன்றுகிறது!'' என்று அவள் வாய் மலர்ந்தாள்.

''ஆமாம். புத்தம் புது மலர்தான். வாங்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியதே அதனால்தானே?'' என்றான் ஸ்வதேஷ்.

சமையலறையி லிருந்து வெங்காயம் பொசுங்கும் வாசனை வந்தது. ''அடடா! வெங்காயத்தை அப்படியே அடுப்பில் விட்டு விட்டு வந்துவிட்டேனே! பொசுங்குகிறதே!'' என்று கூறிக் கொண்டே அவள் மீண்டும் சமையலறைக்கு ஓடினாள்.

'இன்றைக்கு என்ன இவ்வளவு சமுகம்? பொன்னான நகை கொண்டு வந்து போட்டாலும் மூக்கைச் சிணுங்குபவள் ஆயிற்றே. இன்று இரண்டணாப் பெறாத பூவில் இப்படி மகிழ்ந்து போகிறாளே! இந்தப் பெண்களின் மனத்தை அவர்களைப் படைத்த ஆண்டவனுங்கூடப் புரிந்து கொள்ள முடியாதோ'' என்று எண்ணிய ஸ்வதேஷ் ஏதேதோ சிந்தனையில் ஆழ்ந்தான்.

எத்தனையோ நாட்களுக்குப் பிறகு அன்று முதல் தடவையாக ஸ்வதேஷுக்குச் சூடான உணவும் மனைவியின் குளுமையான பேச்சும் சுவைக்கக் கிடைத்தன.

மறுநாள் ஸ்வதேஷ் மாலை ஆபீஸ் விட்டுப் புறப்பட்டபொழுது, அவனோடு அவனுடைய ஒரு நண்பனும் இருந்தான். ஆபீசில் வேலை செய்து கொண்டிருந்தபொழுதே ஸ்வதேஷ் இரண்டொரு முறை எண்ணினான், இன்று யாரும் நண்பர்கள் கிடைக்காவிட்டால் நேரே வீட்டுக்குப் போய் விடுவதென்று! ஆனால் நண்பன் கிடைத்த பின் வீடு போக வேண்டிய பிரச்னை ஏது? வீட்டுக்குப் போய் ஒன்றுக்கு இரண்டாக வாங்கிக் கட்டிக் கொள்ள நேர்ந்தால்...? அந்த அச்சமும் கூடவே பிறந்தது.

இரு நண்பர்களும் முதலில் ஒரு நல்ல சிற்றுண்டிச் சாலைக்குச் சென்று தேநீர் அருந்தினர். அப்புறம் கடைத் தெருவைச் சுற்றி வந்தனர். கடைசியாகக் கடற்கரைக்குப் போய் அமர்ந்தனர். சூரியன் மூழ்குவதற்கு முன்னால் நீருக்கு நெருப்பு வைத்திருந்தான். கடலில் எத்தனையோ வண்ணங்கள் கரைந்து ஒரு கலவைக் காட்சி கண்ணுக்கு விருந்தாக அளித்தது.

ஸ்வதேஷின் உள்ளம் ஒரு கணத்துக்குத் தத்துவ ஞானியாக மாறியது. 'வாழ்க்கையும் ஒரு கடலைப் போலத்தான். அங்கே சூரியன் என்றால் இங்கே அன்பு தீ மூட்டுகிறது!' என்று கூற நினைத்தான். ஆனால் சொல்லவில்லை.

அதற்குள் அவன் கவனம் கலைந்தது. நேற்றுப் பார்த்த அதே பெண் கையில் பூச்சரத்தோடு அவன் எதிரே நின்று கொண்டிருந்தாள்; மலர் வேணி வாங்குமாறு அவனை வேண்டிக் கொண்டிருந்தாள்.

ஸ்வதேஷ் சற்றுத் தடுமாறினான். ஆனால் அதே நேரம் தன்னைச் சமாளித்தும் கொண்டான். பெண்ணிடம் அவன் மலர் வேணியை வாங்கிக் கொண்டு இரண்டணாவை எடுத்துக் கொடுத்தான். பெண் இரண்டணாவை வாங்கிக் கொள்ளும் பொழுது சற்றுத் தயங்கினாள். ஆயினும் கைநீட்டி வாங்கிக் கொண்டு அப்பால் நகர்ந்தான்.

பெண்ணின் முகம் இன்றும் முந்தைய நாள் போலவே, வெகுளியாக, கபடமின்றி இருந்தது. அவளுடைய கோதுமை நிறத்தில், இன்று நாணத்தின் ஒளி இன்னும் பளிச்சிட்டது. ஆனால் நேற்றுப் போன்ற அழுக்கு இன்று இல்லை; இன்று நல்ல சுத்தமாகக் காட்சி அளித்தது அவள் முகம்.

நண்பன் சற்று வியப்போடு, ''என்ன பிரதர்! அண்ணியோடு கருத்து சேர்த்து விட்டாற் போலத் தோன்றுகிறதே! அதற்காகத்தான் இந்த மலர் வேணி வாங்கியாகிறதோ?'' என்று கேட்டான்.

ஸ்வதேஷ் இளநகை புரிந்தான். ''சும்மாத் தான் வாங்கினேன்! அவளோடாவது, கருத்து சேரவாவது? சரி, நேரமாகிறது. புறப்படுவோமா?'' என்று கேட்டான்.

இருவரும் எழுந்தார்கள்.

ஸ்வதேஷ் வீட்டுக்குப் போன பொழுது, அவன் மனைவி அவனை எதிர்நோக்கி அமர்ந்திருப்பது போலத் தோன்றியது. ''இன்றைக்கு என்ன இவ்வளவு நேரமாக்கிவிட்டீர்கள்? கடைத் தெருவுக்குப் போய் வரலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அப்படியே ஷீலா வீட்டுக்கும் போய் வரலாம் என்று...!'' என்று நீட்டி முழக்கினாள் அவள்.

''என்னவோ நேரமாகி விட்டது!'' என்று கூறியவாறே ஸ்வதேஷ் பையிலிருந்து மலர் வேணியை எடுத்து அவளிடம் கொடுத்தான். அவன் மனைவி அன்போடு அதை வாங்கி ஒரு முறை மோந்து பார்த்தாள். அப்புறம் கண்ணாடிக்கெதிரில் போய் நின்று கொண்டு தலையில் சூடிக் கொள்ளலானாள். அப்பொழுதுதான் ஸ்வதேஷ் கவனித்தான், அவள் தன்முகத் தலை சீவிப் புது வகை முடி போட்டுக் கொண்டிருப்பதை. நான்கைந்து நாட்களுக்கு முன்பு அவன் அலுவலகத்தில் வேலை பார்க்கும் 'ரிஸப்ஷனிஸ்ட்' பெண்ணும் இதே போன்றுதான் முடி போட்டிருந்தாள் என்பது அவனுக்கு நினைவு வந்தது.

அவன் மாற்றுடை தரித்துக் கொண்டான். அவன் மனைவி அவன் கையிலிருந்து அலுவலக உடையை வாங்கி 'ஹாங்கரில்' மாட்டினாள். பிறகு துண்டு, சோப்புப் பெட்டி முதலியவற்றை எடுத்துக் கொடுத்து, ''கைகால்கள் கழுவிக் கொள்ளுங்கள். நான் ரொட்டி சுடுகிறேன். சுடச் சுடச் சாப்பிடுங்கள்! அப்புறமாகக் கடைத்தெருவுக்குப் போய் வருவோம்!'' என்றாள்.

அன்று உணவின் சுவையே அலாதியாயிருந்தது. மனைவியின் பேச்சும்கூடப் புது வகையாகச் சுவைத்தது.

மனைவியிடம் இந்த மாறுதல் எப்படி வந்தது என்பது ஸ்வதேஷுக்கு விளங்கவே இல்லை. 'ஏதோ விஷயம் இருக்கணும்! இந்த வேணி...! இதென்ன, ஒரு சாதாரணப் பொருள்? இவள் இவ்வளவு மாற இது

போதாது. வேறு ஏதோ விஷயம்! இருக்கிறது' என்று எண்ணினான்.

நாட்கள் சென்றன. மாலை நேரத்தில் நண்பர்கள் யாரும் கிடைக்கவில்லையென்றால், ஸ்வதேஷ் சீக்கிரம் வீட்டுக்கு வந்து விடுவான். மனைவியும் மகிழ்ச்சி கொள்வாள். மனைவியிடத்தில் நாளுக்கு நாள் ஏதோ மாறுதலைக் கண்டான் ஸ்வதேஷ். ஏன்? தன்னிடமேகூட எத்தனையோ மாறுதலை உணர்ந்தான்.

இப்பொழுதெல்லாம் அலுவலகத்திலிருந்து வீட்டுக்குப் போகும்பொழுது, ஒரு நாள்கூட மனைவிக்காக வேணி வாங்க மறப்பதில்லை ஸ்வதேஷ். அது அன்றாடப் பழக்கமாகவே கூட ஆகிவிட்டது அவனுக்கு.

பூ விற்கும் எத்தனையோ பெண்கள் அங்கு இருப்பார்கள். இருந்தாலும், முதல் நாள் வலியக் கொடுத்துச் சென்றாளே, அந்தப் பெண்ணைத் தேடியேதான் அவன் மலர் வேணிகள் வாங்குவான். அவளுக்கு அது எப்படி நல்ல போணியோ, அப்படியே அவனுக்கும் அது நல்ல போணியாக இருந்தது ஒரு காரணம். இன்னொரு காரணம், ஒருவரிடத்திலேயே வாடிக்கையாக வாங்கினால் நல்ல பொருளாகக் கிடைக்கும் என்பது. உண்மையாகவே, அவளும் ஸ்வதேஷுக்கு நல்ல நல்ல மலர் வேணிகளாகவே பொறுக்கிக் கொடுத்து வந்தாள். வெள்ளை வெளேர் என்ற மல்லிகை மொட்டினால் கட்டிய வேணி. இரவுக்கிரவே மலர்ந்து பொழுது புலரும் பொழுது மணம் பரப்பும் அது.

வேணிகள் விற்கும் பெண்ணும் அலர்ந்து மலராகி விட்டது போன்று தோன்றியது ஸ்வதேஷுக்கு. இளமையின் இடைகழியில் நிற்கும் பால்யப் பருவம், பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே, எப்படித்தான் இடைகழியைத் தாண்டுகிறதோ, தெரிவதில்லை!

அந்தப் பெண்ணைப் பார்க்கும் பொழுதெல்லாம் ஸ்வதேஷின் மனத்தில் இரக்கம் சுரந்தது. இவளின் தலைவிதியை என்னவென்பது? இப்பெண் இப்படி மலர் விற்று விற்றே பெரியவளாகி விடுவாள். அப்புறம் திருமணம் ஆகும். ஒரு வேளை முன்பே திருமணம் ஆகி விட்டதோ, என்னவோ? குழந்தை குட்டிகள் என்று ஆகிக் கிழவியும் ஆகிவிடுவாள்!

ஒரு நாள் ஸ்வதேஷ் சௌக்கில் அமர்ந்து எதிரே உள்ள கட்டடத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். மலர் வேணி கொண்டு வரும் பெண் அவன் எதிரே வந்து நின்றாள். என்றும் போல அன்றும் ஸ்வதேஷ் இரண்டணாவை அவளிடம் நீட்டி வேணி ஒன்றைப் பெற்றுக் கொண்டான். காசு வாங்கிக் கொண்ட பெண் ஒருகணம் அங்கேயே நின்றாள். அவள் முகத்தில் நாணம் நிழலாடுவதைக் கண்டான் ஸ்வதேஷ். தயங்கித் தயங்கி நிற்பதையும் கண்டான். ஏதோ சொல்ல விரும்புகிறாள் என்று தோன்றியது.

ஸ்வதேஷ் அவள் சங்கோசத்தைக் களைய எண்ணி, "இது வரை எவ்வளவு விற்றிருக்கும்?" என்று கேட்டான்.

"நான்கு விற்று விட்டன. இப்பொழுது தானே வந்திருக்கிறேன். இப்பொழுதெல்லாம் எல்லாமே விரைவில் விற்றுவிடுகின்றன."

"அப்படியா?"

"ஆமாம், உங்கள் கையால் போணியானால், எல்லாம் கண் மூடிக் கண் திறப்பதற்குள் விற்று விடுகின்றன."

"அப்படியானால் எல்லோருக்கும் முன்னும் எனக்குக் கொண்டு வந்து கொடு!"—ஸ்வதேஷ் இலேசாக இளநகை புரிந்து கூறினான்.

"ஆனால் நீங்கள்தான் சிற்சில சமயம் நேரம் கழித்து வருகிறீர்களே!" பெண்ணின் குரலில் இலேசாகக் குறை கூறும் வாடை அடித்தது.

ஸ்வதேஷ் மேலே பேசத் தோன்றாமல் சிறிது மௌனம் சாதித்தான். பிறகு "நீ எங்கே இருக்கிறாய்?" என்று கேட்டான்.

பெண், தான் இருக்கும் இடத்தைச் சொன்னாள். அதோடு விவரமும் சொன்னாள்: "அங்கே எங்களுக்கு ஒரு சிறு குடிசை இருக்கிறது. நான் என் பாட்டியோடு இருக்கிறேன். அவளுக்குக் கண் பார்வை தெரிவதில்லை. ஆனாலும் அவள் அழகழகாக வேணிகள் கட்டுவதில் வல்லவள். எங்கள் குடிசைக்கு எதிரிலேயே இரண்டு மல்லிகைச் செடிகள் இருக்கின்றன."

"இரண்டுதானா?" ஸ்வதேஷ் வியப்போடு கேட்டான். "அவற்றில் பூக்கும் பூக்களைக் கொண்டு இத்தனை மலர் வேணிகள் கட்ட முடிகிறதா?"

"முடியாது. பெரும்பாலும் பூக்களைக் கடைத் தெருவிலிருந்துதான் வாங்குகிறோம். எங்கள் வீட்டுச் செடியிலிருந்து ஒன்று அல்லது இரண்டு வேணிகள்தான் கட்ட முடிகிறது. ஆனால், உங்களுக்குத் தருகிறேனே, வேணி! அது மட்டும் எங்கள் வீட்டுச் செடியில் பறித்த மொட்டுக்களைக் கொண்டு கட்டியதுதான்!"

"அப்படியா? நல்ல பெரிய பெரிய மொட்டுக்களாக இருக்கின்றனவே!" என்று புகழ்ந்தான் ஸ்வதேஷ்.

பெண்ணின் முகமும் மலர் மொட்டாக மலர்ந்தது.

"இந்த மொட்டுக்களைக் கொண்டு நானே என் கையால் வேணி கட்டுகிறேன்!" பெண்ணின் சொற்களில் இலேசான நாணம் படர்ந்தது.

"பேஷ்!"

பெண்ணின் சொல்லில் வடிந்த நாணம் முகத்திலும் காட்சி தந்தது. அவன் ஒரு கணம் பேசாமல் இருந்தான். "நீங்கள் தினமும் வேணி வாங்குகிறீர்களே, அதை என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

ஸ்வதேஷ் புன்னகை பூத்தான். ஏதோ சொல்வதற்கும் வாய் திறந்தான். ஆனால் என்ன நினைத்துக் கொண்டானோ, சொல்ல வந்ததைச் சொல்லாமல் மௌனம் சாதித்து விட்டான்.

பெண்ணும் அதற்கு மேல் எதுவும் கேட்கவில்லை. அவள் முகத்தில் நாணச் சிவப்பு ஏறியது. ஸ்வதேஷ் இலேசாகச் சிரித்துத் தலை குனிந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம், அவள், "நான் போய் வருகிறேன்!" என்று கூறி விடைபெற்றாள்.

"சரி!"

அவன் சரி சொல்லிய பிறகும், பெண் ஒரு கணம் தயங்கி நின்றாள். பிறகு மெல்ல அடி எடுத்து வைத்து அங்கிருந்து நகர்ந்தாள்.

# போலி உறுப்புகள் மலிவு. உங்கள் உயிர் அப்படியல்லவே

EI-பிரேக் வால்வை உதாரணமாகஎடுத்துக்கொள்வோம்.

பிரேக் பெடல் எவ்வளவு அழுத்தப்படுகிறதோ அதற்கேற்ப காற்றழுத்தம் உண்டாக்கப்படுகிறது. இதனால் பிரேக் எவ்வளவு இயங்குகிறது என்பதை டிரைவர் உணரமுடிகிறது.

ஆகவே, சாலை பாதுகாப்பைக் கெடுக்க ஒரே ஒரு போலி உறுப்பு போதும்! போலி உறுப்புகள் உயிருக்கே அபாயம் ஏற்படுத்தலாம்.

காற்றழுத்த பிரேக்குகட்கு எப்போதும் CD-TVS அசல் உறுப்புகளைப் பொருத்துவதே பாதுகாப்பாகும்.

## ஃபுல்ஏர்/ஏர் அஸிஸ்ட் பிரேக்குகளுக்கு அசல் உறுப்புகள் CD-TVS கம்பெனியால் மட்டுமே தயாரிக்கப்படுகின்றன






எப்போதும் CD-TVS தயாரிக்கும் அசல் உறுப்புகளையே கேட்டு வாங்குங்கள்




**சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட்.**
(டி.வி.எஸ். தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை-50

**வண்டிகளின் விநியோகஸ்தர்களிடமும், எங்களுடைய பிராந்திய விநியோகஸ்தர்களிடமும் கிடைக்கிறது.**

தமிழ் நாடு, மைசூர், கேரளா, ஆந்திரப் பிரதேசம், பாண்டிச்சேரி மற்றும் கோவா பிரதேசங்களுக்கு விநியோகஸ்தர்கள்:

**மதுரஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்**
37, [illegible] ரோடு, சென்னை-5

# சுத்தமான தேன்!

நூற்றுக்கு நூறு சுத்தமானது. கேரளம் குடகு, கன்னியாகுமரி இவ்விடங்களிலிருந்து அந்தந்த பிராந்திய விசேஷ சுவையும் மணமும் பிரதிபலிக்கும் மூன்று வகை தேன் — 450, 225 கிராம் புட்டிகளில் கிடைக்கும்.

அரசு அங்கீகாரம் பெற்ற
அக்மார்க் முத்திரையுடன்
பாக் செய்யப்படுகிறது

**ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்.**

153, மவுண்டு ரோடு சென்னை-2.




சென்னை, மவுண்ட்ரோடு உள்ள எமது டிபோவில் எல்லா சில்லரை விற்பனை இலாக்காக்களும், (வீட்டு அலங்கார பொருள்கள் விற்கும் பிரிவு தவிர) காலை 8-30 முதல் இரவு 7 மணி வரை தொடர்ந்தாற்போல் திறந்திருக்கும்

# புதிய

# மக்ளீன்ஸ்

டூத்-பிரஷ்

எவ் வகையிலும் சிறந்தது




# மக்ளீன்ஸ்

-காணக் கண் கவரும் டூத்-பிரஷ்

# நூல்கள் வாங்காத நூலகங்கள்!

ஆச்சரியமாக இருக்கிறதா? தமிழகத்தில் இன்று பலப்பல நூலகங்கள் இந்த நிலையில்தான் உள்ளன!

'தனிமனிதர்களிடம்தான் புத்தகம் வாங்கப் பணம் இல்லை என்றால் நூலகங்களுக்குப் புத்தகங்களை விற்பதில்கூட இப்போதெல்லாம் ரொம்பச் சிரமம் இருப்பதாகத் தெரிகிறது. ஏதேதோ தனி மனிதர்களைப் பற்றிய 'மலர்'கள் ஏராளமாய் நூலகங்கள் மீது திணிக்கப்படுகின்றனவாம்' - இப்படிப் பொருள்படப் பேசினார் திரு பி. சுப்பிரமணியம்.

நேரு தினத்தையொட்டிப் பல்வேறு பதிப்பகத்தாரின் முப்பது குழந்தைகள் புத்தகங்களை வெளியிட்டுக் குழந்தை எழுத்தாளர் சங்கம் ஏற்பாடு செய்திருந்த விழாவில் பேசினார் பி. எஸ்.

விசாரித்ததில் தெரிய வந்த தகவல்கள்: அவர் குறிப்பிடுவது அமைச்சர்களின் பிறந்த நாள் விழா மலர்கள். இவையும் பலப்பல சிறிதும் பெரிதுமான பத்திரிகைகளும்தாம் நூலகங்களில் தருவிக்கப்படுகின்றனவே யன்றி நூல்கள் வாங்க நூலகங்களுக்குப் பணம் இல்லை.

காரணம், முன்பு ஐம்பது நூலகங்கள் நடத்தப்பட்டு வந்தால் அதே தொகையைக் கொண்டு இப்போது சுமார் நூறு நூலகங்கள் நடத்தப்படுகின்றன. மான்யம் அதிகரிக்காமல் நூலகங்கள் மட்டும் பெருகவே நிர்வாகச் செலவுகளுக்கே வருவாய் சரியாகப் போய் விடுகிறது!



---

ஸ்வதேஷ் கடலின் நர்த்தனம் புரியும் அலைகளைப் பார்க்கலானான். அவற்றின்மீது கதிரவனின் பொன்னிறக் கிரணங்கள் நீண்ட தங்கப் பாதை சமைத்திருந்தன. சின்னஞ்சிறு படகு ஒன்று ஆடி அசைந்தவாறு சென்று கொண்டிருந்தது. படகு வெகுதூரம் சென்று விட்டது. அதன் பாய்மரம் ஒரு வெள்ளைப் புள்ளியெனக் காட்சி அளித்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தப் புள்ளியும் நாவல் நிற வானத்தின் வண்ணத்தில் கரைந்து மறைந்து விட்டது.

இப்பொழுதெல்லாம் ஸ்வதேஷின் மாலைப் பொழுது வீட்டிலேயே இன்பமாகச் செல்லலாயிற்று. அவனைப் பார்ப்பது குதிரைக் கொம்பாகி விட்டது அவன் நண்பர்களுக்கு.

ஒரு நாள் ஸ்வதேஷ் மனைவியோடு திரைப் படம் போகத் திட்டமிட்டான். அவன் மனைவி நேராக அவன் அலுவலகத்துக்கே சென்றாள். அங்கிருந்து அவர்கள் படம் பார்க்கப் புறப்பட்டனர். படம் பார்த்து விட்டு வெளியே வரும்பொழுது இருட்டி விட்டது. "கடற்கரையை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு வருவோமே! வீட்டை விட்டு எத்தனையோ நாட்கள் கழித்து வந்திருக்கிறேன்" என்றாள் அவன் மனைவி.

ஸ்வதேஷ் அவளோடு கடற்கரைக்குச் சென்றான்.

கடற்கரையில் சுற்றும்பொழுது பூக்காரப் பெண் எதிர்ப்பட்டாள். அவள் அவர்களை நோக்கித்தான் வந்து கொண்டிருந்தாள். அவள் கையில் ஒரே ஒரு வேணிதான் இருந்தது.

அவள் அருகில் வந்ததும் ஸ்வதேஷ் தன் மனைவியைப் பார்த்து, "பார்த்தாயா? இன்று வேணி வாங்கவே மறந்து விட்டேன்! ஒன்றே ஒன்றுதான் பாக்கியிருக்கிறது. நமக்காகவே மீந்திருப்பது போல! நான் எப்பொழுதுமே இவளிடம்தான் வேணி வாங்குவது வழக்கம்" என்றான், முகம் மலர. ஆனால் அவன் மனைவி ஊடுருவும் பார்வையால் அந்தப் பெண்ணையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ஸ்வதேஷின் பார்வை மனைவியின் பக்கம் சென்றது. "அட! இன்றைக்கு இவளுக்கு என்ன வந்து விட்டது?" என்று யோசிக்கலானான்.

அடுத்த நிமிஷம் அவன் பார்வை அந்தப் பெண் மீது படிந்தது. மலரும் மொட்டு மீண்டும் மூடிக் கொண்டு விட்டது போலத் தோன்றியது! முகத்தில்தான் என்ன வாட்டம்! என்ன சோர்வு!

ஸ்வதேஷ் அவள் கையிலிருந்து வேணியை வாங்கிக் கொண்டு இரண்டணாவை எடுத்து அவள் முன் நீட்டினான். ஆனால் அந்தப் பெண் அவன் தந்த இரண்டணாவை வாங்கிக் கொள்ளவில்லை. வருந்தும் குரலில் மெதுவாகக் கூறினாள்: "பழைய இரண்டணா அப்படியே பாக்கி நிற்கிறது. இன்றோடு கணக்கு நேராகி விட்டது!"

அதைக் கூறிய வேகத்தோடு அவள் ஒரு பக்கம் சென்று விட்டாள். அவள் நடையில்தான் என்ன தளர்ச்சி! ஸ்வதேஷ் கண் கொட்டாமல் அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

மனைவி அங்கே நின்றவண்ணமே, தன் முடியில் வேணியைச் சூடிக் கொண்டு ஸ்வதேஷுக்குக் காட்டிக் கேட்டாள், "பாருங்களேன்! வேணியைச் சரியாகச் சூடிக் கொண்டிருக்கிறேனா?" என்று!

"வெகு கனக்காகச் சூடிக் கொண்டிருக்கிறாய்! இன்று உன் முடிக்கு இது இன்னும் அழகு சேர்க்கிறது!" என்றான் ஸ்வதேஷ்.

"அழகான பொருள் எந்த இடத்திலும் அழகாகத்தான் இருக்கும்." மனைவியின் பேச்சில்தான் என்ன உயிர்த் துடிப்பு!

ஆனால் ஸ்வதேஷின் உதடுகளில் சிரிப்பையே காணோம்.

அவர்கள் வீட்டுக்குப் புறப்பட்ட பொழுது, ஸ்வதேஷுக்குத் தன் நடையில் ஒரு விசித்திரச் சோர்வு தோன்றியது. அங்கேயே ஏதாவது ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து விடலாமா என்றுகூட எண்ணினான். ஆனால் உட்காரவில்லை. கனக்கும் கால்களைத் தூக்கித் தூக்கி வைத்த வண்ணம் எப்படியோ வீட்டை நோக்கி நடக்கலானான். தமிழாக்கம்: ரா. வீ.






# அப்பாப் பிள்ளை



டில்லி கால்ஸா கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றும் ஸ்ரீ மஹீப் ஸிங் பஞ்சாபியைத் தாய்மொழியாகக் கொண்டவரானாலும், ஹிந்தி மொழியில் திறமைவாய்ந்த எழுத்தாளர். ஆராய்ச்சித் துறையில் நாட்டம் கொண்டவர். சில கதைத் தொகுதிகளும், ஆராய்ச்சி நூல்களும் நூல் வடிவம் பெற்றுள்ளன. எழுத்துத் துறையில் புது உணர்வை உண்டுபண்ணி, ஒரு விழிப்பை ஏற்படுத்த 'ஸஞ்சேதனா' என்றொரு மூன்று மாதத்துக்கு ஒரு முறை வெளியாகும் பத்திரிகையை நடத்தி வருகிறார். 'அப்பாப் பிள்ளை' நம் ஊரிலும் காணப்படும் பாத்திரம் தான் என்றாலும், எழுதியிருக்கும் முறையில் அப்பாப் பிள்ளையைத் தவிர வேறு யாரையாவது காண முடிகிறதா, பாருங்கள்!

ஸார்! நான் கவர்ன்மெண்ட் காலேஜ், ஹிஸாரில் பிஸிக்ஸ் புரொபஸராக இருக்கிறேன்... நீங்கள் பேராசிரியர் ஸந்த்ராம் சர்மாவின் பெயரைக் கேள்விப்பட்டிருப்பீர்களோ... ஹிஸ்டரி புத்தகங்கள் பல எழுதியுள்ளாரே, அவர் தான்: ஆமாம் அவரேதான். நீங்களும் அவர் புத்தகங்களைப் படித்திருக்கிறீர்களா?... ஒரு காலத்தில் அவர் எழுதிய புத்தகங்களுக்குத்தான் எல்லா யூனிவர்ஸிடிகளிலும் 'டிமாண்ட்'. இப்பொழுதெல்லாம் எத்தனையோ பேர் அவரைக் காப்பியடித்து நூற்றுக் கணக்கில் ஹிஸ்டரி புத்தகங்கள் எழுதித் தள்ளியிருக்கிறார்கள்... ஆனால் அவரைப் போல எழுத முடியுமா?... அவர் பிள்ளையாண்டான் தான் சார் நான். அப்பா ரிடையராகி ரொம்ப நாளாகி விட்டது. இங்கேதான் 'ராஜோரி கார்ட'னில் அவர் பங்களா கட்டிக்கொண்டிருக்கிறார். ஆனால் நான் ஹிஸாரைப் போன்ற பொட்டைக் காட்டில் கிடக்கிறேன். 'நான் ஏன் டில்லிக்கே வந்துவிடக் கூடாது? இங்கு ஒரு கல்லூரியில் உனக்கு இடம் கிடைக்காதா?' என்று நீங்கள் கேட்பீர்கள். உங்களுக்கு நான் எப்படிச் சொல்வது? என்னத்தைச் சொல்வது? நானே என்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ளக்கூடாது. ஆனால் கேட்கிறேன். என் 'ஸ்டேட்டஸ்'க்கு ஒரு பிஸிக்ஸ் புரொபஸர் உங்களுக்குத் டில்லியில் யாராவது கிடைப்பார்களா? என் அளவு 'குவாலிபிகேஷன்ஸ்' இங்கே எத்தனை பேருக்கு இருக்கும்? பதினைந்து வருஷங்கள் 'எக்ஸ்பீரியன்ஸ்' வேறு இருக்கிறதே! 1952ல் நான் பனாரஸ் ஹிந்து யூனிவர்ஸிடியில் எம். எஸ்ஸி.

**மஹீப் ஸிங்**

எழுதிப்னேன். பஸ்ட் கிளாஸ் கிடைத்தது எனக்கு! பஸ்ட் கிளாஸ் வரத்தான் வந்ததே, என்ன பயன்? பல ஆண்டுகள் தொடர்ந்து நான் தில்லிக் கல்லூரிகளுக்கு 'அப்ளை' செய்து கொண்டே இருந்தேன். என் கால் தூசுகூடப் பெறாத 'ராஜேஸ்ட்'களை எடுத்துக்கொண்டார்கள். என்னை ஒதுக்கிவிட்டார்கள். ஏன்? நான் ஒரு 'லோரர்ஸ்'க்கு 'டினர்' பண்ணவில்லை; சிபாரிசுக்கு ஆள் தேடவில்லை. நான் எங்கேயாவது 'கன்டெஸ்ட்' பண்ணினால்கூட என் 'மெரிட்'டில்தான் பண்ணுகிறேன்!

என் அப்பா 'நாஷனல் ரிபுடேஷன்' உள்ள பேராசிரியர்களில் ஒருவர் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். தில்லிக் கல்லூரிகளில் உள்ள எத்தனையோ பிரின்ஸிபால்களே அவரிடம் படித்தவர்கள்தான். அவர் நினைத்தால் என்னை எங்கு வேண்டுமானாலும் 'பிக்ஸ்-அப்' பண்ணலாம். அவருக்கு அவ்வளவு செல்வாக்கு உண்டு. ஆனால் உங்களுக்கு என் அப்பாவை முழுக்க முழுக்கத் தெரியாது என்று எண்ணுகிறேன். அவர் மிகத் தீவிரமான கொள்கைகள் உள்ளவர். ''என்னிடம் லட்சம் ரூபாய் வேண்டுமானாலும் வாங்கிக் கொள். யாரிடமும் சிபாரிசுக்கு மட்டும் போகச் சொல்லாதே. இவ்வளவு வருஷ வாழ்க்கையில் நான் அந்த ஒரு காரியம் மட்டும் செய்ததில்லை'' என்பார். அவர் வாய் அசைத்தால் போதும். என்னை ஏதாவது ஒரு நாஷனல் லாபரேட்டரியில் வெகு சுலபமாக அமர்த்தியிருக்கலாம். ஆனால் அவர் தம் வாழ்க்கையில் அந்த மாதிரி ஒரு காரியம் செய்ததே இல்லை. ஒருவருக்குச் சிபாரிசு செய்ததும் இல்லை, ஒருவர் சிபாரிசை ஏற்றதும் இல்லை. என் அப்பாவைப் பற்றி நான் உங்களுக்கு என்ன சொல்ல? அவரைப் போன்ற 'காரெக்டர்' 'மாரல் இன்டக்ரிடி' உள்ளவர்கள் இன்று உலகத்தில் ஒரிருவரே கிடைப்பார்கள். அவர் என் தந்தை என்பதற்காக நான் இதை உங்களுக்குச் சொல்லவில்லை. அவருடன் பழகித் தொடர்பு கொண்டவர்கள் எல்லாருக்குமே இந்த விஷயம் நன்றாகத் தெரியும். நான் உங்களுக்கு ஒரு சுவையான நிகழ்ச்சியைக் கூறட்டுமா? அவர் ரோஹ்தக் கவர்ன்மென்ட் கல்லூரியில் பிரின்ஸிபாலாக இருந்தபொழுது ஒரு முறை ஓர் ஆள் பஞ்சாப் ராஜ்யத்தைச் சேர்ந்த ஸீனியர் மினிஸ்டரிடமிருந்து ஒரு சிபாரிசுக் கடிதம் வாங்கிக் கொண்டு அவரிடம் வந்தான். அப்பா அவனுக்கு எதிரிலேயே அந்தக் கடிதத்தை வாங்கிக் குப்பைக் கூடையில் வீசி விட்டார். அதே கையோடு மந்திரியின் பெயருக்கு ஒரு நோட் எழுதினார்: 'தயவு செய்து என் அலுவல்களில் தலையிடாதீர்கள்!'

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அவர் நினைத்திருந்தால் ஏதாவது ஒரு யூனிவர்ஸிடியின் வைஸ்சான்ஸலர் ஆகியிருக்க முடியாதா? இன்றைக்கு எத்தனையோ யூனிவர்ஸிடிகளில் வைஸ் சான்ஸலர்களாக இருக்கிறார்களே, அவர்கள் பெரும்பாலும் அப்பாவுக்கு ரொம்ப ரொம்ப ஜூனியர்கள். சிலபேரோ அவருடைய மாணவர்களே. ஆனால் என் அப்பா எந்த நாளிலும் இதையெல்லாம் பொருட்படுத்தியதே இல்லை.

ஒரு விஷயம் பாருங்கள்! நான் ஏதாவது தேசிய லாபரட்டரியில் வேலை செய்ய விரும்புகிறேன். பிஸிக்ஸ் என்றால் எனக்கு ரொம்ப இஷ்டம். எம். ஏ. வில் பிஸிக்ஸ்! ஒரு தடவை நான் தேசிய லாபராடரிக்கு விண்ணப்பம்கூட அனுப்பினேன். 'நான் எந்த வேலையும் செய்யத் தயார்! நீங்கள் சொன்னால் நான் கூடம் கூட்டுவேன்; மேஜையைப் பெருக்குவேன். எனக்கு நாட்டுப் பணி செய்வதென்றால் அவ்வளவு ஆசை!' என்று டைரக்டரிடம் நேரிலேயே சொன்னேன். ஆனால் என்னை வேண்டாமென்று கூறி யாரோ ஊர் பெயர் தெரியாத உதவாக்கரையை வைத்துக் கொண்டு விட்டார்கள்! உங்களுக்குத் தெரியுமா? வெளி நாடுகளில் விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடங்களில் பதினெட்டு மணி நேரம் வேலை செய்கிறார்கள்! ஆனால் நம் ஊரிலே நடப்பது என்ன? நீங்கள் பளபளவென்று மின்னும் தரையைப் பார்ப்பீர்கள்! பெரிய பெரிய கட்டடங்களைக் காண்பீர்கள்! ஆனால் கட்டடத்துக்குள்ளே ஒரு துரும்பு என்றால் ஒரு துரும்புகூட அசைவதில்லை. காண்டீனில் உட்கார்ந்து தினங்கள் சிற்றுண்டி தேநீர் அருந்துவார்கள்; வம்பு அளப்பார்கள்! இதுவா விஞ்ஞானிகளின் வேலை? நாட்டின் பணம் கோடிக்கணக்கில் விரயமாகிறது. ஷியர் வேஸ்டேஜ்—பிக் நாஷனல் வேஸ்டேஜ்!

ஆமாம், உங்கள் கல்லூரியில் பிஸிக்ஸ் லெக்சரர் ஒன்று இருக்கிறதா? ஆனால் நான் விண்ணப்பம் போட்டு என்ன பயன்? என்னை எடுக்க மாட்டார்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஏனென்றால் அவர்களுக்கு 'லோட்டா'க்கள்தான் தேவை. ஹாஹாஹா! சார், நான் உண்மையைச் சொல்கிறவன்; உண்மையைச் சொன்னால் உடம்பு எரிச்சல் தானே? என் அப்பாவும் அப்படித்தான். ஒளித்து மறைத்து அவருக்குப் பேச வராது. அவர்தான் பிரைம் மினிஸ்டரையே இலட்சியம் செய்கிறதில்லையே! அவர் எதற்காக ஒருவரை இலட்சியம் பண்ண வேண்டும்? அவர் தமக்கென்று யாரிடமும் 'பேவர்' — சலுகை நாடிப் போனதில்லை. அவர் வாழ்க்கையே கல்வி கற்பதிலும் புகட்டுவதிலும் போய்விட்டது. அவர் ஓய்வு பெற்று விட்டார் என்றாலும் அவருடைய அன்றாட அலுவலை இன்றும் பாருங்கள், எப்படி வேலை செய்கிறார் என்று! இந்த வயதிலும் என்னைக் காட்டிலும், உங்களைக் காட்டிலும் அவர் இரண்டு மடங்கு வேலை செய்கிறார். எப்பொழுது பார்த்தாலும் அவர் ஏதாவது படித்துக்கொண்டோ எழுதிக் கொண்டோதான் இருப்பார்! எழுத்து — படிப்பு அலுத்தால் கொஞ்ச நேரம் தோட்ட வேலை செய்வார். அல்லது ஒரு சிறு குட்டித் தூக்கம் போடுவார். நீங்கள் நம்பமாட்டீர்கள், அவர் இஷ்டத்துக்குத் தூக்கம், அவர் இஷ்டத்துக்கு விழிப்பு! அலுப்பின்றி அப்படியே எழுத உட்கார்ந்து விடுவார்! கடுங் குளிர் வீசும் இரவுகளில் நாம் போர்வையை இழுத்து மூடிக் கொண்டு படுத்தோமானால் தலை போகிற காரியமாயிருந்தாலும் எழுந்திருக்கத் தயங்குவோம். ஆனால் அவர் ஆனந்தமாகத் தம் மேஜை எதிரில் அமர்ந்து எழுதிக் கொண்டிருப்பார்! நீங்கள் அப்பாவின் அறைக்குள் போய்ப்




பாருங்கள்! எங்கு பார்த்தாலும் புஸ்தகங்களையேதான் காண்பீர்கள்! லட்சக்கணக்கில் அவர் ரூபாய்களைப் புஸ்தகங்களுக்காகச் செலவிட்டிருக்கிறாராக்கும்.

மெய்தான், நீங்கள் சொல்வது மெய்தான். தில்லியில் சம்பள 'கிரேட்' இந்தியா முழுவதைக் காட்டிலும் அதிகம்தான். நான்காவது திட்டத்தில் இன்னும்கூட மாறிப் போகிறது. ஆனால் பாருங்கள், ஒரு வேடிக்கை! என்னைப் போன்ற ஆள் — இத்தனை மேலான 'குவாலிபிகேஷன்ஸ்' வைத்திருக்கும் நபர், பல ஆண்டுகள் 'சர்வீஸ்' போட்ட பிறகும் 'இண்டர்வியூ'வில் பொடிப் பசங்களுக்குச் சமானமாக நிற்கணும் என்றால், அது எத்தனை பெரிய சாபக் கேடு! நீங்களே யோசித்துப் பாருங்கள், இது மனிதனை எப்படியெல்லாம் 'ஃப்ரஸ்டிரேட்' ஆக்கும் என்று! போன முறை நடந்ததை உங்களுக்குச் **சொல்கிறேனே! இரண்டு வருஷங்கள் இருக்கும் என்று நினைக்கிறேன். நான் ஓர் 'இண்டர்வியூ'வுக்குத் தில்லி வந்திருந்தேன்! இருபது பேர் 'இண்டர்வியூ'வுக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். ஹெட் ஆஃப் தி டிபார்ட்மெண்ட் ஒவ்வொரு கேள்வி கேட்டுவிட்டு எங்களை இரண்டு இரண்டு நிமிஷங்களில் அனுப்பி விட்டார்! கடைசியில் எடுத்துக் கொண்டது யாரை? ஒரு ஸ்பூனை! ஆம், என்னைப் பொறுத்த வரையில் அவன் ஒரு சிறு பொடிப் பயல்! இண்டர்வியூவுக்கு முன்னால் தன் நண்பர்களோடு கடலை கொரித்துக் கொண்டிருந்தான்! நான் என் கண்களாலேயே பார்த்தேன்! ஆனால் எனக்கு அப்பொழுதே தெரியும், அவனைத்தான் எடுத்துக் கொள்வார்கள் என்று!

என்னைக் கேட்டால் நான் தில்லிக்கே வர விரும்பவில்லை. இந்த நகரமே எனக்குப் பிடிக்கவில்லை. அவ்வப்பொழுது வந்துவிட்டுப் போகிறது என்கிறது வேறு விஷயம். ஏனென்றால் சொந்த வீடு இங்கே இருக்கிறதே! சொந்த வீடு என்று ஒன்று இங்கே இல்லையென்றால், ஒருவர் ஆயிரம் தருகிறேன் என்றாலும் நான் இங்கே வரமாட்டேன். **அப்பப்பா! என்ன ஜன நெரிசல்! அந்த**

ஜனங்களுக்குத்தான் எத்தனை அவசரம், தலை தெறிக்கிறாற்போல! ஆலாய்ப் பறக்கிறார்கள், நிலை கொள்ளாமல்! ஓரிடத்திலிருந்து இன்னோர் இடம் போவதென்றால், நாள் முழுவதும் பிடித்து விடுகிறது! மணிக்கணக்கில் நின்றாலும் பஸ் கிடைப்பதில்லை. அப்படியே கிடைத்தாலும் முட்டி மோதிக் கொண்டு ஏறவேண்டியிருக்கிறது! அம்மம்மா! ஆண்டவன்தான் காப்பாத்தணும். என்னைப் போன்ற 'டிக்லிபைட்' ஆனால் ஏறவே முடியாது. அப்புறம் இந்தப் பஸ்கள் விடுகிற புகையிருக்கிறதே, அது உடல் நலத்துக்கு எவ்வளவு தீமை தெரியுமா? மனிதன் வாழ்வதற்கு இடம் கிடைக்கிறதே, அதுவும் எப்படி? மூச்சுவிட முடியாமல் திணறியல்லவா போக வேண்டியிருக்கிறது! நீங்கள் 'லிட்டரச்சர்' ஆசாமி! நானோ 'சைன்டிஸ்ட்'. புகையும் புழுதியும் நிறைந்த நகர்ப்புறத்து நாற்றக் காற்று, உடல் ஆரோக்கியத்தை எப்படிப் பாதிக்கிறது என்பதை நன்கு அறிவேன். ஹிஸார் சின்ன ஊர்தான் என்றாலும், இதைக் காட்டிலும் எத்தனையோ மேல்! கூட்டமும் கிடையாது; கூச்சலும் கிடையாது. நீங்கள்கூடச் சொல்லிக் கொண்டிருந்தீர்களே, அன்றைக்குச் 'சாந்தினி சௌக்'கிலிருந்து உங்கள் வீட்டு வரைக்கும் டாக்ஸியில் வந்ததாக! கனியாக ஆறு ரூபாய் 'அவுட்' இல்லையா? ஹஹஹஹா! பஸ்ஸுக்கு ஹனுமார் வால் மாதிரி நீளக் 'கியூ' நின்று கொண்டிருந்ததும், இடித்து மோதிக்கொண்டு போவானேன் என்று எண்ணியதற்கும் அந்தத் தண்டம்! பெரிய நகரங்கள் என்றால் இது தான் தொல்லை! இந்த ஜனங்கள் பெரிய பெரிய நகரங்களைத் தேடி ஏன்தான் இப்படி ஓடுகிறார்களோ? உண்மையில் இந்த ஊர், வீட்டு வாசற்படியை விட்டு இறங்கினால் போக்குவரத்துக்கென்று ஆறு ரூபாய் விழுங்கி விடுகிறது. அங்கே ஒரு வருஷத்துக்கு என்ன தான் கைவீசிச் செலவழித்தாலும்கூட இத்தனை ஆவதில்லை. சைக்கிளை எடுத்துக் கொண்டோம், கல்லூரிக்குப் போனோம். திரும்ப வந்தோம். படிக்க எழுத உட்கார்ந்தோம் — காசுக்குச் செலவு ஏது அங்கே? எனக்கு ஒரே ஓர் ஆசை; படித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று! எவ்வளவு முடியுமோ, அவ்வளவு படித்து அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும்! வேடிக்கை விளையாட்டில் ஆசை கிடையாது. ஆடை அணியில் ஆர்வம் கிடையாது. அப்பா அடிக்கடி சொல்வார், மனிதன் இந்த மாதிரிப் பொருள்களுக்காகப் பிறக்கவில்லை என்று!

எப்பொழுதாவது மனைவி வற்புறுத்தினால், வருஷத்துக்கு ஒரு முறை, ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ஏதாவது சினிமா பார்க்கப் போய் வருவதுண்டு. அங்கேயும் என்னத்தைச் சொல்ல? போய் உட்கார்ந்தால் எனக்குத் தூக்கம் வந்துவிடும். ஜாலியாக ஒரு தூக்கம் போட்டு விட்டு வருவேன். நான் திருமணம் ஆனதுமே மனைவியிடம் சொல்லிவிட்டேன், நீ கரம் பிடித்திருப்பது ஒரு பேராசிரியரை; மாபெரும் 'ஸ்காலரை'. அரசாங்க அலுவலகத்தைச் சேர்ந்த அதிகாரி உனக்கு எத்தகைய வாழ்க்கையைத் தருவாரோ, அத்தகைய வாழ்க்கையை நீ என்னிடம் எதிர்பார்க்க முடியாது. இங்கு என்னிடம் தியாக வாழ்வு தான் கிட்டும் — ஆமாம், 'லைப் ஆஃப் டெடிகேஷன்'. இதோ, பாருங்கள், எனக்குச் சம்பளம் ஏறக்குறைய நானூறு ரூபாய் வருகிறது. அங்கே நான் வீட்டுக்கு வாடகை எவ்வளவு தருகிறேன், தெரியுமா? எண்பது ரூபாய். அதாவது என்னுடைய சம்பளத்தில் கணிசமான தொகையை நான் வீட்டு வாடகைக்காகத் தருகிறேன். நான் நினைத்தால் இரண்டு — மூன்று அறைகள் கொண்ட நல்ல வீட்டை நாற்பது ரூபாய்க்குக்கூடப் பெறமுடியும். என் கல்லூரியில் உள்ள மற்றப் பேராசிரியர்கள் இப்படிப்பட்ட வீடுகளில் தான் வாழ்கிறார்கள் — ஆனால் என்னால் அது போன்ற கிளிக் கூண்டு வீடுகளில் இருக்க முடியவில்லை. என்னிடம் எண்ணற்ற புத்தகங்கள் இருக்கின்றன. இருபது இருபத்தையாயிரம் ரூபாய் நான் புத்தகங்களுக்கே செலவிட்டிருக்கிறேன். சின்ன வீடாக இருந்தால் நான் என் புத்தகங்களை எங்கே வைத்துக் கொள்வது? நீங்களே சொல்லுங்கள்!

நீங்கள் இந்த வீட்டுக்கு என்ன வாடகை தருகிறீர்கள், இருநூறு? எத்தனை இடம் இருக்கிறது? இரண்டு அறைகள், ஒரு சமையலறை. இருநூறு ரூபாய்க்கு இரண்டு அறைகளும் ஒரு கிச்சனும்! என்ன அக்கிரமம்! ஹிஸாரில் நான் இருக்கும் வீடுபோல் இங்கே நானூறு ரூபாய் கொடுத்தாலும் கிடைக்காது.

ஆனால் சார், இங்கே பெரிசாகக் 'கிரேட், கிரேட்' என்று சொல்கிறார்களே, இந்தக் கிரேடை வைத்துக் கொண்டும்தான் இங்கே என்ன செய்துவிட முடியும்? அங்கே பதினைந்து வருஷ சர்வீஸ் போட்டும் எனக்கு நானூறு ரூபாய்தான் கிடைக்கிறது. தில்லியில் ஒரு லெக்சரருக்கே ஆரம்பச் சம்பளம் அறுநூறு ரூபாய். ஊதிய உயர்வும் அவ்விடத்தைக் காட்டிலும் இங்கு எவ்வளவோ அதிகம். ஆனாலும் தில்லியில் இருப்பதென்றால், உங்களிடம் உங்களுக்கே சொந்தமாக ஒரு வாகன வசதி இருக்க வேண்டும். உங்களிடம் சொந்தமாக ஸ்கூட்டர் இருக்கிறது. என்னைக் கேட்டால் ஸ்கூட்டர் ஒரு வாகனமா? குளிர் காலத்திலே குளிர், வெய்யில் காலத்தில் வெய்யில், மழைக் காலத்தில் மழை எல்லாம் உங்கள் தலை மேல்தான்! அதனால் மனிதனிடம் வாகன வசதி என்று இருக்க வேண்டுமானால் அது கார்தான். ஆனால் நம் நாட்டில் எத்தனை பேர் கார் வைத்துக் கொள்ளக்கூடிய வசதி படைத்தவர்களாக இருக்கிறார்கள்? என் தகப்பனார் அதனால்தான் கார் வைத்துக் கொள்ளவில்லை. அவர் விரும்பினால் ஒன்று என்ன, நான்கு கார்கள்கூட வைத்துக் கொள்ளலாம். கேட்டால், காரை வைத்துக் கொண்டு மனிதன் ஏன் விபத்தை விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும் என்று கேட்கிறார். இன்னொரு விஷயம், கார் வைத்துக் கொள்வதென்றால், அதில் செல்வச் செருக்குத் தோன்றக்கூடுமாம். என் தந்தை இந்தச் செல்வச் செருக்குக்குக் கடும் எதிரி. எங்களை எங்கள் தந்தை ஆளாக்கிவிட்ட விதமே தனி. எனவே, அப்பாவின் குணம் எங்களுக்கு அப்படியே படிந்து விட்டது. பேராசிரியர் வந்த[illegible]

# பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்ப் ஏன் வாங்க வேண்டும்? இதோ 5 சிறந்த காரணங்கள்




1. எல்லா ப்ளூரஸன்ட் லாம்புகளும் வாங்கும் போது பிரகாசமாகவே இருக்கும். ஆனால் உபயோகிக்க உபயோகிக்க அவை ஒளி குன்றிவிடும். உபயோகிக்கும் காலம் முழுவதும் நிறைந்த ஒளி தருபவையே சிறந்த லாம்புகள். பிலிப்ஸ் லாம்புகளில் பிரகாசம் குன்றுவது மிகச் சிறிதளவே. அதோடு ஆரம்பத்திலும் பிலிப்ஸ் லாம்புகள் அதிக ஒளியைத் தருபவை. உதாரணமாக ஒரு 40 வாட் பிலிப்ஸ் லாம்ப் பிரதி வாட்டிற்கு 70 லூமன்களுக்கும் மேலாக ஒளி தருகிறது.

2. ஒரு ப்ளூரஸன்ட் லாம்பின் பிரகாசம் அதிகரிக்க அதிகரிக்க, நிறங்களை மாறுதலின்றிக் காட்டும் அதன் சக்தி குறைந்துவிடும் என்பது விஞ்ஞான ரீதியிலான உண்மை. பிலிப்ஸ் "கூல் டேலைட்" லாம்புகள், சிறந்த ஒளி, நிறங்களை மாறுதலின்றிக் காட்டும் சக்தி இரண்டையுமே பெற்றிருக்கும்படி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டவை. அதிகப் பிரகாசமான லாம்ப் தேவையென்றால் பிலிப்ஸின் 'வொயிட் லாம்ப்' வாங்குங்கள்.

3. பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்புகளினால் ரேடியோ பாதிக்கப்படாது. ஏனெனில் இவற்றை டிசைன் செய்யும் பொழுதே இப்பிரச்சினை தீர்க்கப்பட்டிருக்கிறது. மேலும் பிலிப்ஸ் ஸ்டார்ட்டர்களில் உள்ள ஒரு விசேஷ அமைப்பு எல்லா ஓசைகளையும் சப்தங்களையும் நீக்கி விடுகிறது.

4. பிலிப்ஸ் லாம்புகள் இந்தியாவின் மிகச் சிறந்த, தன்னிறைவு பெற்ற தொழிற்சாலையில், உலகின் உயர்ந்த தரங்களுக்கேற்பத் தயாரிக்கப்படுகின்றன. அவை பெரிய அளவில் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எனவே அவற்றின் உயர்தரம் உத்திரவாதம் நிறைந்தது.

5. ப்ளூரஸன்ட் லாம்புகளுடன் பிலிப்ஸ் TL ஸ்டார்ட்டர்களையும் சோக்குகளையும் உபயோகித்தால் நீடித்த உழைப்பும் நிறைந்த ஒளியும் பெறலாம்.

## பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்புகள்

**சீரான ஒளிக்கு இவற்றைவிடச் சிறந்தவை கிடையாது**

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

**என்று சொல்லிக் கொள்வதே எங்களுக்குப்** பெருமை தரும் விஷயம் ஆயிற்றே.

அப்பா பங்களா கட்டிய பொழுது அவருடைய பழைய மாணவன் ஒருவன் — அப்பொழுது அவன் தில்லி டெலிபோன்ஸில் ஜெனரல் மானேஜராக இருந்தான். வீட்டுக்கு டெலிபோன் வைத்து விட்டான். அப்பா இரண்டு மாதங்களுக்கெல்லாம் அதை எடுக்கச் சொல்லி விட்டார். ஏன் என்று கேட்பீர்கள் நீங்கள்? ஹஹ்ஹஹா. 'படிக்க எழுத எனக்கு இடையூறாக இருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் கிர் கிர் கிர் என்று காதைத் துளைக்கிறது!' என்று கூறி அகற்றச் சொல்லி விட்டார். அப்பாவுக்கு டெலிபோன் இருக்கிறது என்று தெரிந்ததும் ஜனங்கள் ரொம்பவும் தொந்தரவு கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள். இந்தக் கூட்டத்துக்குத் தலைமை தாங்க வர வேண்டும் என்பார் ஒருவர். இந்தக் கலையரங்கைத் திறக்க வரவேண்டும் என்பார் இன்னொருவர். அப்பா, 'இதென்ன தொல்லை?' என்று அலுத்துக் கொண்டு விட்டார். நானும் வேண்டுமென்றால் ஹிஸாரில் டெலிபோன் வைத்துக் கொள்ளலாம். ஆனால் எனக்கும் இதே தொல்லைகள் வரும் அல்லவா? எங்கள் குடும்பத்துக்கே இந்த வெளிப் பகட்டுப் பிடிக்காது.

ஒரு சமயம் நடந்ததை உங்களுக்குச் சொல்கிறேனே! நீங்கள்தான் பார்த்துக்கொண்டிருக்கிறீர்களே, நான் விரும்புவது சாதாரண உடையைத்தான்! வேட்டி,சட்டை, செருப்பு! வகுப்புக்குப் போனாலும் சரி, கவர்னருக்கு அப்பாவையே பார்க்கப்போனாலும் சரி, நான் என் பழக்கமான உடையை விடுவதில்லை. ஒரு சமயம் ஓர் 'இன்டர்வியூ'வுக்குப் பிறகு அந்தக் கல்லூரிப் பேராசிரியர் ஒருவர், ''உங்கள் 'பர்ஸனலிடி இம்ப்ரெஸிவ்' ஆக இல்லை, சார்!'' என்றார். ''தில்லிப் பல்கலைக் கழகத்தில் எனக்கு உத்தியோகம் கிடைத்தால் கிடைக்கட்டும், கிடைக்காவிட்டால் போகட்டும், நான் என் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ள முடியாது. நான் வேட்டிதான் கட்டுவேன், சட்டைதான் போடுவேன். வாரத்துக்கு ஒரு தடவைதான் தாடியை வழிப்பேன்!'' என்று கூறிவிட்டேன்.

பிஸிக்ஸ் சொல்லிக் கொடுத்தால் என்ன, யோசித்துப் பாருங்கள், நீங்களே! ஸூட், கோட், பூட் போட்டுக் கொண்டு மினுக்குகிறவர்களும் தினமும் ரேஸரோடு போராடி நேரத்தை வீண் அடிப்பவர்களும் என்னத்தைப் பிரமாதமாகச் சொல்லிக் கொடுத்துக் கிழிப்பார்கள்! அவர்களுக்குத்தான் இந்த வேலைகளுக்கே பொழுது போதாதே!

ஹிஸாரில் இதைப் பற்றியெல்லாம் 'ஏன் கருடா' என்று கேட்பார் இல்லை. உங்கள் பணத்தில் பெரும் பகுதி இந்தப் பகட்டிலும் மினுக்கிலுமே செலவழிந்து கொண்டிருக்கும். வீட்டையும் 'டிப்டாப்'பாக வைத்துக் கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் எங்கள் இடத்தில் இந்தப் பகட்டுக்குப் பிரமேயமே கிடையாது. அங்கே இரண்டு மூன்று ஜோடி வேட்டியிருந்து விட்டால், ஹாய்யாகக் காலத்தை ஓட்டி விடலாம்.



''ஐந்நூறு பக்கங்களுக்குக் குறையாத நாவல் ஏதாவது இருந்தால் கொடு. பஸ் வருவதற்குள் படித்து முடித்துவிட்டுத் திருப்பித் தருகிறேன்.''

சரி, விடை கொடுக்கிறீர்களா, உங்கள் நேரத்தை வெகுவாக எடுத்துக் கொண்டு விட்டேன்.

ஆமாம், ஆமாம்! எனக்கு ஹிஸார் போகிற பஸ் கிடைத்துவிடும். சாயந்திரத்துக்குள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்துவிடுவேன்!

நீங்கள் எதற்குச் சிரமப்படணும்? நான் போய்க் கொள்ளுகிறேன். சரி, நீங்கள் ஸ்டேஷனுக்குத்தான் போகிறீர்கள் என்றால் பஸ் நிற்கும் இடத்துக்குக் கொண்டு விட்டு விடுங்கள். ஆனால் பாருங்கள். எனக்கு ஸ்கூட்டரில் உட்காருவதென்றால் பயம்....

தாங்க்யூ வெரி மச்! மன்னிக்கணும். உங்களுக்கு ரொம்பச் சிரமம் கொடுத்து விட்டேன். பஸ் புறப்பட இன்னும் பதினைந்து இருபது நிமிஷம் இருக்கிறது!.....

ஒரு வார்த்தை! கேட்டுப் போங்கள்!.... நீங்கள் சொல்லிக் கொண்டிருந்தீர்களே, உங்கள் கல்லூரியில் ஒரு பிஸிக்ஸ் வேகன்ஸி இருக்கிறது என்று... நான் என்னைப் பற்றிப் புகழ்ந்து பேசுவதாக நீங்கள் நினைக்கலாம். ஆனால் உண்மையில் இந்த விஷயத்திலே என்னைப் போன்ற அறிவாளிகள் இரண்டொருவர் கிடைத்தாலே அபூர்வம். நான் 'டாப்' ரகத்தைச் சேர்ந்தவன், எங்க அப்பா 'ஹிஸ்டரி'யில் எப்படி 'டாப்'போ, அப்படி! எந்தக் கல்லூரி என்னை அமர்த்திக் கொண்டாலும், குறைந்தபட்சம் 'பிஸிக்ஸ்'லே, அதன் ரெபுடேஷனை அப்புறம் யாரும் எட்டிப் பிடிக்க முடியாது. பிரின்ஸிபால் உங்கள் பேச்சுக்கு ரொம்பவும் மதிப்பு வைப்பார் என்று கேள்விப்பட்டேன். நீங்கள் என்னைப் பற்றி அவரிடம் கொஞ்சம் சொல்லுங்களேன்! ஆக்சுவலி ஐ ஷுட் இன்வைட் மீ டு ஜாயின் ஹிஸ் இன்ஸ்டிட்யூஷன். நீங்கள் அவரிடம் பேசிப் பாருங்கள். நல்லது, நமஸ்காரம், வணக்கம். நன்றி. நான் ஹிஸார் போய் உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். கட்டாயம் பதில் எழுதுங்கள். நன்றி... நான் போய்விட்டு வரட்டுமா...?

தமிழாக்கம் : **அக்ஷயம்**



★ இக்குறியிட்ட கடிதம் பதினைந்து ரூபாய் பரிசு பெறுகிறது.

கடந்த அக்டோபர் மாதத்தில் தமிழகத்தின் மாண்புமிகு மந்திரிகள் எல்லோரும் ஒன்றுகூடி, பயிற்சி பெற்று வேலையின்றித் தவிக்கும் பட்டதாரி ஆசிரியர்கள், எஞ்ஜினியர்கள் இவர்களின் குறைகளை நீக்கத் திட்டமொன்று தீட்டியதை நாடறியும். அக்டோபர் 15ந் தேதி 'ஹிந்து' தின இதழில் இத்திட்டத்தின்படி வேலை பெற மனுச் செய்து கொள்ள வேண்டிய முறையையும் பிரசுரித்திருந்தார்கள். திட்டத்தின் விவரம்: 'அப்ரண்டிஸ் ஆசிரியர்கள்' என அவர்கள் அழைக்கப்படுவார்கள். இரண்டாண்டு காலம் இது நீடிக்கும். முறையான காலி இடம் ஏற்படும்போது அவர்கள் தகுதிக்குரிய இடத்தைப் பெறுவார்கள். அப்ரண்டிஸாகப் பணியாற்றுபவர்களுக்கு முறையே பட்டதாரி ஆசிரியருக்கு ரூ. 175ம் இடைநிலை ஆசிரியருக்கு ரூ. 125ம் ஹையர்கிரேடு ஆசிரியருக்கு ரூ. 100ம் என் மொத்த ஊதியம் வழங்கப்படும் என்பதோடு மேற்படி ஆசிரியர்கள் அனைவரும் நவம்பர் 1ந் தேதி முதல் பணியில் அமர்த்தப்படுவார்கள் என்பது அரசு வெளியிட்ட அறிக்கையில் முக்கிய அம்சமாகும்.

பணியின்றி அல்லல்பட்டுக் கொண்டிருந்த என் போன்றோருக்கு இச்செய்தி சுவையாயிருந்தது. குறிப்பிட்ட தேதிக்குள் மனுக்களை அனுப்பிவிட்டு மூட்டை முடிச்சுகளுடன் காத்திருந்தோம், முதல் தேதியில் அமர்த்தும் இடத்தில் சென்று குறைந்த ஊதியத்திலும் பணி ஏற்க! ஆனால் இன்றுவரையில் ஆணை ஏதும் வரவில்லை.

அடுத்த கல்வி ஆண்டிலிருந்து நடைமுறைக்கு வருமென்று அறிவித்திருந்தாலும் நலமாக இருந்திருக்கும். கண் துடைப்புக்காக நவம்பரிலிருந்து எனக் கூறிவிட்டு, பேசாமல் இருப்பது அரசுக்கு அழகல்ல! வெளிநாட்டுப் பயணத்தை 'வெற்றியுடன்' முடித்துக்கொண்டு திரும்பிய மாண்புமிகு நெடுஞ்செழியனார், "என்னைக் கேளாமல் எப்படி இத்திட்டத்தைக் கொண்டு வந்தீர்கள்? இவர்களுக்கு எப்படி வேலை தருவது?" என்று கோபித்துக் கொண்டதாக அறிகிறோம். மந்திரிகள் ஒருவருக்கொருவர் மாறுபடப் பேசுவதால் நாங்கள் அதை நம்பி எதிர்பார்த்து ஏமாற வேண்டியுள்ளது.

மேட்டூர் அணை,
12–11–70 கே. இராதா மணாளன்

"ஸ்டெல்லாவின் கிளி" என்னும் கட்டுரையைப் படித்தேன். பயனுள்ள பல செய்திகளைக் கூறியிருக்கிறார்.

கிளியின் நாக்கின் மேல் ஒரு மெல்லிய தோல் இருக்கும். அது உரித்து வந்தால்தான் கிளி பேச முடியும். பச்சை மிளகாய் நன்றாகப் பழுத்த பின் சிவப்பாக மாறும் இல்லையா? அந்தச் சிவப்பான மிளகாய்ப் பழங்களாகப் பார்த்து (சிவப்பு மிளகாய் வற்றல் அல்ல) கிளிக்கு நிறையக் கொடுக்க வேண்டும். கிளியும் விரும்பி உண்ணும். மிளகாய்ப் பழத்தை நிறைய உண்டதும் கிளியின் நாக்கு மேல் தோல் தானாகவே உரிந்து விடும். பின் பேசக் கற்றுக்கொண்டு பேச முடிகிறது.

கிளிக்குக் கட்டாயம் பெயர் வைக்க வேண்டும். தன்னைப் பெயரைச் சொல்லி மற்றவர்கள் செல்லமாக அழைக்க வேண்டும் என்று கிளி அதிகம் எதிர்பார்க்கும்.

கூண்டுக்குள்ளே இருந்தாலும் கிளிக்கு ஊஞ்சலாடுவதில் தனி ஆசை. பழைய 'எம்ப்ராய்டரி ஃப்ரேம்' களையோ அல்லது பழைய ரிங் டென்னிஸ் வளையத்தையோ கட்டித் தொங்க விட்டுவிட்டால், ஆனந்தமாக ஊஞ்சலாடிக்கொண்டேயிருக்கும்.

சென்னை–14
8–11–70 மைதிலி வேணுகோபால்

★ தமிழ்நாடு காந்திசமாஜமும், சென்னை மாணவ சங்கமும் கூட்டாகச் சேர்ந்து நேருவின் பிறந்த நாளை யொட்டி நகர கலாசாலை, பள்ளி மாணவர்கள் பேச்சுப் போட்டி ஒன்றை ஏற்பாடு செய்துள்ளதாக 4–11–70 தேதியிட்ட 'இந்து' தினசரியில் பார்த்தேன். மேற்படி போட்டிக்குப் பொருள் "ஜனநாயக சோஷலிஸமே நாட்டின் முன்னுள்ள பிரச்னைகளைத் தீர்க்கக் கூடிய ஒரே வழி". இம்மாதிரியான ஒருதலைப்பட்சமான போட்டிகள் மாணவர்களிடையே குறுகிய மனப்பான்மையை வளர்த்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. இதனால் அவர்களின் பாரபட்சமற்ற சீர்தூக்கி நோக்கும் சக்தியே சீரழிந்துபோகுமென்பது திண்ணம்.

நேரு அவர்களே ஒரு சமயம் ஜனநாயக சோஷலிசத்துக்குச் சரியான விளக்கம் தர முடியாமல் சஞ்சலப்பட்டதாக ஒரு பத்திரிகையில் படித்தேன். அவருடைய சோஷலிஸ சிஷ்யர்களாலும் அதற்குத் தக்க விவரணத்தை (Definition) கொடுக்க இன்றுவரையில் முடியவில்லை.

இதை எழுதும்போது ஸ்ரீ காமகோடி சங்கராசாரியார் அவர்களின் அறிவுரை ஒன்று எனக்கு நினைவுக்கு வருகிறது. "ஆற்றைக் கடக்கும் பாலத்தின் அடி வளைவில் இருந்து கொண்டு எட்டிப் பார்க்கும் ஒருவனுக்கு ஏனைய வளைவுகள் – அவை அளவில் ஒன்றாய் இருந்தபோதிலும் – குறுகலாகத்தான் தோன்றும்" என்றார்.

அதைப் போல சோஷலிஸ தீவிரவாதிகளுக்குச் சோஷலிஸத்தைத் தவிர சர்க்கார் அதிகாரமற்ற ஏனைய வழிகள் குறுகலாக மட்டுமல்ல, அவை மக்களை உய்விக்கும் வழியாகவே தோன்றாது.

மாணவர்களுக்கான எந்த ஒரு போட்டியும் இவ்வித குறுகிய மனப்பான்மையை அவர்களிடத்தே வித்திட்டு வளர்த்துவிடுமேயானால் அதனால் பாதிக்கப்படப் போவது நமது தாய்நாடே என்பது போட்டியினை ஏற்படுத்தியவர்களுக்குப் புலப்படுகிறதா?

சென்னை–56
7–11–70 என். சௌந்தரராஜன்

உணர்வு திரும்பியபோது நான் வாந்தியெடுத்துக் கொண்டிருந்தேன். கண்களைத் திறக்க இயலவில்லை. கண் இமைகளை யாரோ ஆணியடித்து வைத்திருப்பதுபோல இருந்தது. மீண்டும் மீண்டும் வாந்தி யெடுத்தபோது நெஞ்சு வலித்தது. கண்களை மட்டும் திறக்க முடிந்தால்! சாத்தியமில்லை. கண் இமைகள் இனி எப்போதுமே திறக்கப் போவதில்லையா?

நான் எங்கிருக்கிறேன்? யாரோ என்னைக் கடந்து செல்லும் காலோசை கேட்கிறது. அவள் ஒரு குருடியைப் போல் நோக்கிக் கொண்டிருந்தாள். படுக்கையில் அல்லவா நான் படுத்திருக்கிறேன்? பாயில் படுத்திருந்த என்னைப் படுக்கையில் கொண்டு வந்து படுக்க வைத்தது யார்? இது நரகமா, சொர்க்கமா? சொர்க்கமாகத்தான் இருக்கும். அதனால் தான் இவ்வளவு மிருதுவான மெத்தைப் படுக்கையில் என்னைப் படுக்க வைத்திருக்கிறார்கள்!

வாய் வழக்கத்துக்கு மாறாகக் கசப்பது போலிருந்தது. 'அவள் கசப்பைக் கொண்டு வயிறு நிறைக்கிறாள்' எனக் கூறுவது எத்தனை உண்மை! எனினும் எனக்கு ஏன் இப்படிக் குமட்டிக் கொண்டு வர வேண்டும்? உண்மைதான். பஸ்ஸில் பயணம் செய்யும் போது நான் வாந்தியெடுப்பது உண்டே! ஒரு சமயம் நான் திருவனந்தபுரத்துக்குப் போனபோது பத்தில நாடவை வாந்தி எடுத்திருக்கிறேன்! ஒருவேளை நான் சொர்க்கத்துக்கு வந்தது விமானம் மூலமாக இருக்குமோ?

நான் இறந்தது எப்போது?

சாவு என்றாலே அவளுக்குப் பயம். குழந்தைகள் இருட்டைக் கண்டால் பயப்படுமே, அப்படி! இருந்தாலும் எவ்வளவு அநாயாசமாக மரணத்தைச் சந்திக்க நேரிட்டது!- வேறோர் உலகத்துக்குப் போய்விட அவள் துடித்தாள். பூமியில் ஒரு நிமிடமும் தங்கப் பிடிக்கவில்லை அவளுக்கு.

லிஸி எல்லாவற்றையும் ஒரு முறை நினைவுக்குக் கொண்டுவர முயன்றாள். தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு எப்போது தோன்றியது? அவளுக்கு இப்போது ஒவ்வொன்றும் தெளிவாக

# சொர்க்கத்தில்...

டாட்டாபுரம் சுகுமாரன்



மனத் திரையில் காட்சி தந்தன. அவள் வேலை செய்து வந்த அலுவலகம், சிவப்பு நிறக் கயிற்றுப் பாய் விரித்த தரை, ஸ்டீல் மேஜைகள், நாற்காலிகள், உயரமான நாற்காலியில் அமர்ந்து அவள் 'டைப்' செய்து கொண்டிருந்தது. 'க்யூடெக்ஸ்' வண்ணம் தீட்டிய நகங்கள் 'கீ போர்டி'னிடையே சஞ்சரிக்கும்போது சிவப்பும் கறுப்புமான வண்ணங்கள் அவள் முன் மாறி மாறித் தோன்றுவது, வெள்ளைக் காகிதங்கள் எழுத்துக்களால் நிறைவது, அம்மாதிரி எத்தனை எத்தனை காகிதங்களை அவள் 'டைப்' செய்து தள்ளியிருக்கிறாள்...

அன்றைய வாழ்க்கை எவ்வளவு மகிழ்ச்சிகரமாக இருந்தது! அப்போது அவள் பழைய மானேஜரின் கீழ் வேலை பார்த்து வந்தாள். சொந்த மகளைப் போல் அவர் அவள்மீது பேரன்பு செலுத்தி வந்தார்! அவர் ஒரு நாளும் அவளைக் கடிந்ததில்லை.

அவர் வேலையினின்றும் ஓய்வு பெற்ற பின்னர் அந்தப் புதிய மானேஜர் வந்தார். அவர் வந்த அன்றே அவளை அழைத்து, ''நீங்கள் மிஸஸ் விஜயி, இல்லையா?'' என்று கேட்டார்.

புதிய அதிகாரி வயதில் மிக இளையவர்.

ஓ!... மீண்டும் மனத்தைப் புரட்டுகிறதே! ஏன் இப்படி வயிற்றை வயிற்றைக் குமட்டுகிறது? கட்டிலில் ஒரு பக்கமாகத் திரும்பி ஒருக்களித்துப் படுத்தாள். அப்போது அவளைச் சுற்றி ஓசை கேட்டது. ஏதாவது தேவதைகளாக இருக்குமோ?...




விஜயி மீண்டும் நினைந்தாள். மாலையில் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பியபோது அவள் கணவன் கேட்டான்:

''புதிய மானேஜர் வயதில் சிறியவர் இல்லையா?''

''ஆமாம்.''

''நீ மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.''

''எதற்குக் கவனமாக இருக்க வேண்டும்?''

''முன்பு இருந்தவர் வயதானவர். அவர் கீழ் ஒரு பாதுகாப்பு இருந்தது.''

''ஆனால் அவர்தான் ரிடையராகிப் போய்விட்டாரே!''

''அதற்காகத்தான் சொல்கிறேன்.''

''என்ன?''



எர்ணுகுளத்தைச் சேர்ந்த காளூரில் 1924ம் ஆண்டு பிறந்தவர் பாட்டா புரம் திரு கருமாரன். மலையாளத்தில் சிறுகதைத் தொகுதிகளும் நாவல்களுமாகப் பதினைந்து புத்தகங்களுக்கு மேல் எழுதியுள்ளார். டால்ஸ்டாய், ஹுமாயூன் கபீர் போன்றவர்களை மலையாளத்தில் மொழி பெயர்த்துள்ளார். பாட்டா ஆயில் கம்பெனியில் மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றும் இவரது 'சொர்க்கத்தில்' என்னும் கதை சமூகத்தின் தற்கால நிலையை எத்தனை கச்சிதமாகச் சித்திரிக்கிறது!

''புதிய மானேஜர் இளைஞர். உன்னைப் போன்ற ஸ்டெனோகிராபர்கள் விஷயத்தில் ஏடாகூடமாக...''

''என்னிடத்தில் அதொன்றும் பலிக்காது.''

''இருந்தாலும் நீ எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.''

அன்று முதல் அவள் எச்சரிக்கையாகவே இருந்தாள்.

புதிய மானேஜர் 'டிக்டேஷன்' தரும்போது முடிந்த வரை விலகி யிருக்கவே முயன்றாள். அவள் சந்தேகப்பட்டது போலக் கொஞ்ச நாட்கள் எதுவுமே நடக்கவில்லை.

என்றாலும் ஒரு நாள் 'டிக்டேஷன்' முடிந்தபின் அவள் எழுந்து போக முயன்ற போது அவர் அவளைக் கூப்பிட்டார். ''மிஸிஸ் லில்லி! உடல் மெலிய ஏதாவது மருந்து சாப்பிடுகிறாயா?'' என்று கேட்டார்.

அந்தக் கேள்வியும் பார்வையும் அவளுக்குப் பிடிக்கவில்லை.

''என்னுடைய உடம்பு வாகு. என் அம்மாவும் பாட்டியும் கூட என்னைப் போல் மெலிந்தவர்கள் தான்.''

தொடர்ந்து எதுவும் கூறாமல் அவள் திரும்பி நடந்தாள்.

சில நாட்கள் கடந்த பின்னர் மானேஜரின் மனைவியை அவள் நேரில் பார்த்தாள். சாதாரணமாக இருப்பதை விடச் சற்றுத் தடித்த சரீரமுடையவள். அப்போதுதான் மானேஜர் கேட்ட கேள்வியின் பொருள் அவளுக்குப் புரிந்தது. அவர் நல்ல மனிதர். இளம் வயதினர்தான் என்றாலும் பதவிக்கேற்ற தகுதி மாற்றங்களோடு இருந்தார். போகப் போக அவர் தங்கமான மனிதர் என்று அவளுக்குத் தோன்றியது. அவசியம் ஏற்பட்டால் மட்டுமே பேசுவார். எல்லா நற்குணங்களும் சரிவர வாய்க்கப் பெற்ற நல்ல மனிதர்.

யார் கைகளைப் பிடிப்பது? கை மிகவும் மிருதுவாக இருக்கிறதே! சொர்க்கத்திலுள்ள ஏதோ ஒரு தேவதையாக இருக்குமோ? என்ன செய்கிறார்கள்? தோள்பட்டையில் யார் ஊசி குத்துவது? தொடர்ந்து காலடி ஓசை கேட்கிறது. நிறையத் தேவதைகள் வருகிறார்கள். யாருமே உரக்கப் பேசவில்லை. சொர்க்கத்தில் இப்படித்தான் இருக்கும் போலும். ''வாயைத் திற'' — யாரோ கூறுவது போல் கேட்டது. அவள் யந்திரம் போல் வாயைத் திறந்தாள். அமிர்தமோ? ஆனால் தொண்டையெல்லாம் ஒரே கசப்பாக இருக்கிறதே! அமிர்தத்தின் சுவை அப்படிப்பட்டதாகத்தான் இருக்குமோ? பூலோகத்தில் 'அமிர்தம்' என்ற நாட்டுப் பச்சிலை மருந்துகூடக் கசப்புத்தானே?

நினைவுகள் நீண்டன. நான் அன்றைக்கு 'மாட்னி' சினிமாவுக்குப் போனேன். மேரிக் குட்டியும் கூடவே இருந்தாள். ஒருவேளை என்னுடைய கடைசிச் சினிமாவைப் பார்க்கப் போயிருந்தேனோ! சினிமா முடிந்து வெளியே வந்தபோது மானேஜர் பால்கனியிலிருந்து இறங்கி வந்தார்.

''மிஸிஸ் லில்லியா?''

''ஆமாம்.''

''சினிமா எப்படி இருந்தது?''

''பரவாயில்லை.''

மானேஜருக்குப் பின்னால் நடந்தேன். காரை நெருங்கியபோது அவர் கூறினார்:

''ஏறிக்கொள், லில்லி. வீட்டில் கொண்டு விட்டுவிடுகிறேன். கூட இருக்கும் சிநேகிதி எங்கே இறங்க வேண்டும்?''

''எங்கள் இருவரையும் ஒரே இடத்தில் இறக்கினால் போதும்.''

மானேஜர் காரின் கதவைத் திறந்தார். நான் வேறு சிந்தனையின்றிக் காரில் அமர்ந்தேன். பிறகு மேரிக் குட்டியும் ஏறி உட்கார்ந்தாள். எங்கள் வீட்டுக்கு அருகில் இறக்கி விட்ட பின், 'வருகிறேன்' என்று கூறி மானேஜர் போய்விட்டார்.

இரவு என் கணவர் புயலைப் போல் வீட்டுக்குள் நுழைந்தார். வந்த கையோடு என்னைக் கூப்பிட்டு, ''மானேஜரோடு இன்று சினிமாவுக்குப் போனாயல்லவா?'' என்று கேட்டார். அதைத் தொடர்ந்து கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை விழுந்தது.

''நான் போகவில்லை.''

''நேருக்குநேராகப் பொய் சொல்கிறாயா?''

''மேரிக்குட்டியுடன்தான் போனேன்.''

''எதற்காக மேரிக்குட்டியை இழுக்கிறாய்?''

''அவளைக் கேட்டுப் பாருங்கள்!''

''நான் யாரையும் கேட்க வேண்டியதில்லை. மானேஜரின் காரில்தானே நீ இங்கு வந்து இறங்கினாய்? எனக்கு எல்லாமே தெரியும்.''

''என்றுமில்லாதபடி இன்று ஏன் என் மீது பெருங் குற்றத்தைச் சுமத்துகிறீர்கள்?''

''லில்லி! கண்ணை மூடிக்கொண்டால் உலகம் இருட்டாகி விடாது. நீ மானேஜரோடு தியேட்டரிலிருந்து இறங்கி வந்ததையும் காரில் ஏறிச் சென்றதையும் நேரில் கண்டதாகக் கண்ணுள்ளவர்கள் சொன்னார்கள்.''

''ஒரு 'லிஃப்ட் ஆஃபர்' செய்தால் அதை ஏற்கக் கூடாதா? அதிலும் அவர் என்னுடைய அலுவலக மானேஜராக இருக்கும்போது?''

மற்றொரு கன்னத்தின் மீதும் என் கணவரின் கை பலமாக விழுந்தது.

அன்று இரவு வெகுநேரம் வரை என் கணவரின் கூச்சல் என் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தது. தலையணைகளுள் முகத்

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!






உயர்தர ரப்பரினுலான கருத்தடைச் சாதனம்

## குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினுல் குறைந்த விலை

**வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...**

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

**தாய் சேய் இருவரின் தேகநலம்...**

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைத் சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினுலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

---

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

[illegible] 70/47

தைப் புதைத்துக் கொண்டு அழுதேன். எப்போது உறங்கினேன் என்று எனக்கு நினைவில்லை. காலையில் எழுந்து நான் அலுவலகம் போகத் தொடங்கியபோது... கணவரின் கடும் குரல் அழைத்தது.

''விஜிலி!''

''என்ன?''

''போய்ப் பேனாவும் காகிதமும் எடுத்து வா.''

''எதற்கு?''

''சொல்வதைக் கேள், போ!''

பேனாவும் காகிதமும் கொண்டுவந்தபோது,

''உட்கார்.'' — உத்தரவிட்டார் அவர்.

அவர் செய்யப் போவது என்ன என்று எனக்குப் புரியவில்லை.

''எழுது!''

''என்ன?''

''உன் மானேஜருக்கு.''

''என்ன?''

''ராஜிநாமாக் கடிதம்!''

நான் திடுக்கிட்டேன்.

''சொல்வதுபோல் எழுது.''

அவர் குரல் ஒரு கட்டளையாக இருந்தது.

பின் நான் எதையும் சிந்திக்கவில்லை. எழுதினேன். அவர் அதைப் படித்துப் பார்த்தார்.

''கொண்டு போய் உன் மானேஜரிடம் கொடு...'' என்றார்.

நான் இறங்கி நடந்தேன். கண்களில் நீர் நிரம்பி யிருந்தது. இந்த ராஜிநாமாக் கடிதத்தைக் கொடுப்பதா? குற்றம் எதுவும் செய்யாமலேயே தண்டனையா?

அவர் சொல்வதைப்போல் ராஜிநாமாக் கடிதத்தைக் கொடுப்பதை விட இறப்பதே மேல்.

மரண உலகத்தில் கணவரின் கொடிய வார்த்தைகளைக் கேட்க வேண்டியிராது. ''என்ன ராஜிநாமா இது?'' என்று அலுவலகத்திலுள்ள நாற்பது பேரும் கேட்பார்கள். அவர்களுக்கு என்ன பதில் சொல்வது? அவர்களுடைய அந்தக் கேள்விகளை நான் நேரில் கேட்காமலே...ஆம், அதுதான் விமோசனத்துக்கு வழி. ஏச்சுப் பேச்சு எல்லாவற்றிலிருந்தும் விமோசனம் கிட்டும்.

மருந்துக் கடையிலிருந்து அந்த மருந்தை வாங்கியபோது பழக்கமான அந்தக் கடைக்காரர் கேட்டார்: ''இந்தக் காலை நேரத்தில் இது எதற்கு அம்மா?....''

''வீட்டில் மூட்டைப் பூச்சித் தொல்லை தாங்கவில்லை. அவற்றை இன்று ஒழித்துக் கட்டிவிட வேண்டும் என்று பையனை வரச் சொல்லியிருக்கிறேன். அவன் வந்து கேட்டால் நீங்கள் கொடுக்க மாட்டீர்களா?''

அந்தக் காரணம் அவருக்குத் திருப்தி அளித்துவிட்டது எனத் தோன்றியது. எனக்கு எவ்வாறு அப்படி யெல்லாம் சொல்லத் தோன்றியது? மருந்துப் புட்டியை வாங்கிக் கைப் பையினுள் வைத்துக் கொண்டேன். திரும்ப வந்த வழியே நடந்தேன். பஸ் ஸ்டாப்பை அடைந்தபோது இந்த உலகத்திலிருந்தே விடைபெறுவதென முடிவு செய்து கொண்டேன். கைப் பையைத் திறந்து ராஜிநாமாக் கடிதத்தை எடுத்துத் துண்டு துண்டாகக் கிழித்துக் காற்றில் பறக்க விட்டேன்.

சக்கரங்கள் உருண்டு வருகிற ஓசை கேட்கிறது. தெய்வத்தின் ரதமாக இருக்குமோ? தெய்வமே என்னைக் காண வந்திருக்கலாம். 'நீ எதற்காக விஷம் குடித்தாய்?' என்று அது கேட்கும். நான் பதில் கூறியாக வேண்டும். என்ன பயம்? மனம் திறந்து நான் எல்லாவற்றையும் கூறுவேன். நான் குற்றவாளி இல்லையே! சக்கரங்களின் ஓசை கொஞ்சம் கொஞ்சமாகக் கடந்து தூரச் சென்று விட்டது....'' என்னருகே வந்தவன் என்னைக் கடந்து சென்று விட்டான்.

வீட்டை அடைந்த போது என் கணவர் இருந்த இடத்திலேயே அசையாமல் அமர்ந்திருந்தார். இறந்தோர் வீட்டில் காணும் நிசப்தம் குடிகொண்டிருந்தது.

புடவை எதுவும் மாற்றாமலேயே கட்டிலில் சென்று படுத்தேன். தலையணைகூட இல்லாமல் கிடந்தேன். கை நடுங்கியது. எப்படியோ மூடியைத் திறந்து அப்படியே அதை வாயில் கவிழ்த்துக் கொண்டேன். அந்தத் திராவகம் உள்ளே இறங்கும்போது குடல் வெருவதுபோல் தோன்றியது. வேதனையைப் பல்லைக் கடித்து அடக்கிக் கொள்ள முயன்றேன். ஆனாலும் தாங்க முடியவில்லை. முனகத் தொடங்கினேன். ''ஐயோ!.... அம்மா!... ஐயோ!... அம்மா!....'' என் கணவர் என்னருகில் பாய்ந்து ஓடி வந்தார். ''என்ன? என்ன விஜிலி!'' — அப்போதும் நான் துடித்துக் கொண்டிருந்தேன்.

அவர் அந்த விஷ மருந்து பாட்டிலைப் பார்த்து விட்டார் என்று தோன்றியது. ''ஐயோ! எத்தகைய கொடுமையை நீ செய்து விட்டாய்?'' பைத்தியம் பிடித்தவரைப் போல அவர் ஓடுவதைக் கண்டேன். பிறகு எதையும் நான் காணவில்லை. அதன் பின் எதுவும் எனக்கு நினைவில்லை.

இதோ இப்போது நான் சொர்க்கம் வந்து சேர்ந்து விட்டேன். கண்களை மட்டும் திறக்க முடிந்ததென்றால் சொர்க்கத்தின் பேரெழிலையெல்லாம் கண்டு நான் பேரானந்தம் அடைவேன்....''

இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருக்கும்போது கண் இமைகள் சிறிது சிறிதாகத் திறக்கின்றன. இப்போது எல்லாவற்றையும் தெளிவாகக் காண முடிகிறது. சொர்க்கம் தெய்வம், தேவதைகள் யாருமில்லை.

'நான் எங்கிருக்கிறேன்? நான் இருப்பது ஒரு புதிய உலகமா?' இதை அறிய அறையெங்கும் பார்வையைச் செலுத்தினேன். தலைக்கு மேலே வெள்ளையடிக்கப்பட்ட மேல் தளம். அருகில் அநேகக் கட்டில்கள். வெள்ளுடை தரித்து அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருப்பது தேவதைகள் அல்ல; நர்சுகள்!

விஜிலி திடுக்கிட்டாள்! நான் இருப்பது ஆஸ்பத்திரியல்லவா! நீர் நிறைந்த அகல விரிந்த கண்களோடும் மலர்ந்த முகத்தோடும் நிற்கின்ற கணவர் உற்சாகத்தோடு கூறியது அவளுக்குக் கேட்டது :

''இதோ, விஜிலி கண் திறக்கிறாள்.''

அப்படியானாலும் நான் இறக்கவில்லையா? விஜிலிக்கு ஏமாற்றம் ஏற்பட்டது.

தமிழாக்கம்: மணவை முஸ்தபா

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

